நாட்டுப்பாடல் வெளியீடு—3

# காத்தவராயன் கதைப்பாடல்

பதிப்பாசிரியர் :

நா. வானமாமலை, எம்.ஏ.,எல்.டி.



மதுரைப் பல்கலைக்கழகம்

மதுரை—2

முதல் பதிப்பு — அக்டோபர், 1971

நாட்டுப்பாடல் வெளியீடு—3

காத்தவராயன் கதைப்பாடல்

25

விலை: ரூ. 2-[redacted]

அச்சிட்டோர்:
நியூ செஞ்சுரி பிரிண்டர்ஸ்,
6/30, மவுண்ட்ரோடு, சென்னை-2.

# காத்தவராயன் கதைப்பாடல்

திருச்சியையும் அதனைச் சுற்றியுள்ள சில ஊர்களிலும் "கழுவேற்றப் பாரிவேட்டை" என்ற விழா ஒன்று பங்குனி பௌர்ணமி நாளில் நடைபெறுகிறது. இவ்விழாவில் ஒரு கதையைப் பாடி ஆடுகிறார்கள். அக்கதையே காத்தவராயன் கதைப் பாடல். இப்பாடலின் மாற்றுருவங்கள் பல உள்ளன என்றறிகிறேன். இப்பாடல் பல நூற்றாண்டுகளாக செவிவழி, வாய்வழியே நிலைத்து நிற்பதாகும். மிகப் பிற்பட்ட காலத்தே இதனை எழுதி வைத்திருக்கிறார்கள். எனக்குக் கிடைத்த பிரதி எனது நண்பர் சிவகுமாரன், ஒரு பாடகர் பாடக்கேட்டு எழுதியனுப்பியதாகும். அவருக்குக்கிடைத்த மற்றோர் பிரதியில் "குரோதன வருஷம் வைகாசி மாதம் 10ம் தேதியில் முடிக்கப்பட்டது" என்ற அடிக்குறிப்பு ஒன்று உள்ளது.

இது ஒரு நாடோடி நாடகம் அல்லது கூத்துப் போல் (folk-play) அமைந்துள்ளது. விருத்தப் பாடல்கள், நாட்டுப் பாடல், கும்மி, வசனம் ஆகிய மூன்றுறுப்புகளால் அமைந்துள்ளது. இது பழமையில் நாடகமாக நடிக்கப்பட்டுப் பிற்காலத்தில் ஆட்டத்தோடு நின்றிருத்தல் கூடும்.

கதை நடந்த காலத்தைச் சரியாக நிர்ணயித்துக் கூறச் சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் கூறப்படும் சம்பவங்கள் விஜயநகர ஆட்சிக் காலத்திற்கு முந்தியவை என்று தோன்றுகின்றன. இது பாடப் பட்டு வருவதாதலால் பிற்காலச் சேர்க்கைகளும் நிரம்ப இருக்கின்றன.

இக்கதையில் கருப்பொருள் சமூகவியல் முக்கியத்துவம் வாய்ந்தது. சாதி அமைப்பு முறையை மீறிய ஒரு திருமணமும் அதன் விளைவுகளுமே இப்பாடலின் பொருள். இப்பொருள் முத்துப்பட்டன் கதைப்பொருளைப் போன்றதே.

ஆனால் முத்துப்பட்டன் கதையில் கதைத்தலைவன் பிராம்மணன். அவனை மணஞ் செய்து கொண்டவர்கள் கீழ்ச் சாதியினரான சக்கிலியப் பெண்கள். அவன் மணம் செய்து கொண்டதற்காகத் தண்டனை பெறவில்லை. வேறுகாரணத்தால் அவன் உயிர் நீத்தான்.

காத்தவராயன் கீழ்ச்சாதியான். பறையன் என்றே தன்னைச் சொல்லிக் கொள்ளுகிறான். அவனை வளர்த்தவன் ஓர் நாடுகாவல் அதிகாரி. காத்தவராயன் ஒரு பிராம்மணப் பெண்ணைக் காதலித்தான். அவளை மணம் செய்து கொண்டு நாட்டை விட்டு ஓடி விட்டான். அவனைப்பிடித்து அரசன் கழுவேற்றிவிட்டான். அவனை மக்கள்தெய்வமாக வழிபடுகின்றனர்.

கதை, பிராமணர் மன்னனிடம் வந்து முறையிடுதலோடு தொடங்குகிறது. ஆரியமாலை என்ற பிராம்மணப் பெண்ணைப் பரிமணம் என்ற காத்தவராயன் சிறையெடுத்துப் போய்விட்டதாகவும், அவனைப்பிடித்துத் தண்டிக்கவேண்டும் எனவும் அவர்கள் அரசனிடம் வற்புறுத்துகிறார்கள்.

பரிமளம் என்பவன் சேப்பிளையான் என்ற நாடுகாவல் அதிகாரியின் வளர்ப்புமகன். அரசன் சேப்பிளையானை அழைத்து அவனைப்பிடித்துக் கொண்டு வந்து கழுவேற்றிக்கொன்று விடக் கட்டளையிடுகிறான். சேப்பிளையான் நாடுமுழுவதும் தேடியும் மகனைப்பிடிக்க முடியவில்லை. அதன் பின்னர் நாட்டுக்கு வெளியே சென்று தேடிக் கண்டுபிடிக்கிறான். தந்தை சொல்லைக் கேட்டு அவனோடு சோழ நாடு செல்லுகிறான், சோழ மன்னன் நீ ஏன் பெரும்பாவம் செய்தாய் என்று கேட்கிறான்.

தான் செய்தது தவறென்றால் மக்கள் வணங்கும் தேவரும், தெய்வங்களும் இவ்வாறு பெண்களைக் காதலித்து மணம் செய்து கொண்டுள்ளார்கள் என்றும் அவர்களும் தவறு செய்தவர்களே என்றும் சொல்லுகிறான். இதில் மும்மூர்த்திகளும் அடங்குவர்.

பார்வதியாள் தானிருக்க பரமசிவனும்
ஓர் சடையில் கன்னிதனை ஒளித்துமே வாழலையோ.

உலகமளந்த தொரு உத்தமனும் மாயவனும்
நலமுள்ள உருக்கு மணியாள் நன்றாய் அருகிருக்க

நேசமதிலாய் சிறக்கவே கொண்டருளி
சத்திய பாமாவைத் தேடி அணையலையோ.

அன்னமதிலேறும் ஆனதொரு பிர்ம்மாவும்
வர்ணக் கலைமகளை வாக்கிலே வைத்தருளி

தானே படைத்துச் சமைத்த தொரு ஊர்வசியை
மானே எனத் தொடர்ந்து மருவிப் புணரலையோ

இந்திரர்க்கு இந்திராணி இசைந்து அருகிருக்க
வந்து அகலிகையை மருவிப்புணரலையோ.

எடச்சிகள் சேலையெலாம் எடுத்து மரமேறி
கடைக்கண்ணால் பார்த்திருந்தார் கன்னியர்
மேலாசையதால்

வர்ணமுள்ள மாயவனார் வாழும் இடைச்சியுடன்
வெண்ணெய் தேடியுண்டு மேவிப் புணரலையோ.

பார்த்தனும் சுபத்திரையாள் பாங்கில் கலந்திருக்க
வேத்துமையாய் அல்லியரைக் கலந்து புணரலையோ,

சாதனமாய்க் கண்ணகியும் தானிருக்கக் கோவலனார்
மாதவியைக் கூடி மருவிப் புணரலையோ.

கானத் தவசிருக்கும் கௌசிகரும் ஆசையதால்
மேனகையைக் கூடி மேவிப் புணரலையோ.

வருந்தும் வசிஷ்டரிஷி வையகத்திலெப் போதும்
அருந்ததிப் பெண்ணாளை அணைந்து கலரலையோ.

முன்னும் சில பெரியோர்கள் மும்மூர்த்தி முதலாய்
வர்ண மற்ற பெண்களுடன் மருவிப் புணரலையோ.

இவ்வாறு கூறியதும் அரசன் மனம் மாறி அவனைக் கழுவேற்றாமல் விட்டுவிட எண்ணி அவ்வாறே கூறினான். ஆனால் காத்தவராயன் தன்னைக் கழுவேற்றத்தான் வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறான்.

இதற்குக்காரணம் கழுவேற்றப்பட்டது, ஓர் உண்மை. இதனைக் கதையில் மாற்ற முடியாது. காத்தவராயனது விவாதத்தில் உண்மையிருக்கிறது. அதனைக் கேட்ட அரசன் மனம் மாறினான். ஆனால் கழுவேற்ற ஒரு காரணம் வேண்டும். இல்லாவிட்டால் இங்கேயே கதை முடிந்துபோகும். எனவே கதையை இங்கு நீட்ட வேண்டியிருக்கிறது.

இதற்காகக் காத்தவராயனது முற்பிறப்பிலிருந்து கதையை மறுபடி பாடல் தொடங்குகிறது. முற்பிறப்பில் அவன் கைலாயத்தில் இருந்ததாகவும் அங்கு அவன் ஆறு தேவமாதரைக்கண்டு ஆசை கொண்டதாகவும், பூமியில் பிறந்து அவர்களை மணந்து, கழுவேறிச் சாகவேண்டுமென்று கைலைவாசன் சபித்ததாகவும் அச்சாபமேற்கொண்டே அவன் உலகில் வந்ததாகவும் கதை கூறுகிறது.

இக்கதை சுந்தரமூர்த்தி நாயனார் கதையை ஒத்திருப்பதைக் காணலாம். அது மிக முந்திய கதை. அக்கதையைத்தான் இது பின்பற்றியிருக்கிறது. மேலும் வேறு சாதிகளுக்குள் கலப்பு மணம்

நடப்பதைத் தடை செய்ய, மனிதர் சாதியால் பிரிந்திருந்தாலும் அன்பால் பிணைக்கப்பட்டு மணம் செய்துகொள்ளலாம் என்ற கருத்து வளரக்கூடாது என்பதற்காக பரிமணத்தைப் பிராம்மண குலத்தில் பிறந்தவனாகவும் மூன்று நாள் பறைச்சி முலைப்பால் உண்டவனாகவும் கதையின் பிற்பகுதி கூறுகிறது.

ஆனால் கதையின் முற்பகுதியில் அவனது வளர்ப்புத்தாய் அவனை,

"பின்புத்திதான் நினைக்கும் பறச்சி பெத்த பிள்ளையவன்
நாம் பெத்தபிள்ளை யென்றால் நம்மைப்போல் ஆகாதோ?"

என்ற கண்ணியில் "பறச்சி பெத்தபிள்ளை" என்று கூறுகிறாள். எனவே சங்கப்பிள்ளை என்பவள் அவன் வளர்ப்புத்தாய்தான் தவிரவும் ஆரியமாலை என்ற பிராம்மணப் பெண் தனது கின்னரி நாதம் கேட்டுத் தன்மீது ஆசைகொண்டுத் தன்னைப் பின்பற்றி வரும்பொழுது, காத்தவராயன் சொல்லுகிற சொல்லிலும் அவன் தன்னைப் பறையன் என்றே சொல்லுகிறான்.

"ஆத்தங் கரைதனிலே அநேகம் பேர் பார்த்திருக்க
இதமுள்ள நீராட ஏகினேன் நீர்கேளும்.

தண்ணீர் துறைதனிலே தான்கண்டு மாதயரும்
என்னழகைக்கண்டு இனிது மையல் தானாகி

என் கின்னரச் சத்தம் கேட்டு மிகநடந்தாள்
மாதயரே என்பின்னே வாராதே என்று சொன்னேன்

சோகக் கிளிமொழியாள் என் வசனம் கேட்காமல்
வாரதைக்கண்டு மனதில்பயம் பிடித்து

பார்தனிலே நானும் பறையன், பறையன் என்றேன்"

எனவே உட்சான்றுகளால் இவன் பறைக்குலத்தில் பிறந்தவன் என்று தெரிகிறது. இவனை வளர்த்தவர்கள் நாடுகாவல் அதிகாரி சேப்பிளையானும் அவனது மனைவி சங்கப்பிள்ளையுமாவர்.

பறையன் பிராம்மணப் பெண்ணை மணந்து நாடுவிட்டு நாடு போய் வாழ்ந்துவிட்ட உதாரணம் பரவிவிட்டால், சாதிமுறை குலைந்துபோகும்- சாதி அமைப்பை அடிப்படையாகக் கொண்ட நிலவுடைமை முறையும் சீர்குலைந்து போகும். இதனைத் தடுக்கவே பிற்கால மேல்சாதியினர், கதையின் ஆற்றலைப்போக்கச் சில மாறுதல்கள் செய்தனர்.

அதில் ஒன்றுதான் காத்தவராயனது கைலைபாசமும் சாபமும் அவன் தேவனாயிருந்து சாபத்தால் மனுதர்மத்திற்கு விரோத

மான மணத்தைப்புரிந்தான். மனிதனுகி செய்திருக்கமாட்டான் கதைப்பாடலின் பிற்சேர்க்கையின் நோக்கமே இதுதான்.

அவனுடைய விவாதத்தைக் கேட்டதும் அரசன் மனம் மாறி ஆரியமாலேயோடும் மற்றும் மனேவியரோடும் வாழ்ந்திருக்கக் கூறி ஞனும். இதன் நோக்கம் அரசு சாதிமுறையைப் பாதுகாப்பதில் கடைப்பிடித்த கடுமையான அடக்குமுறையை மறைப்பதற்காகும். பின் ஏன் காத்தவன் கழுவேற்றப்பட்டதாகக் கதை கூறுகிறது? கழுவேற்றப்பட்ட செய்தி மறைக்கமுடியாத உண்மை. கொல்லப் பட்டவர்கள், கழுவேற்றப்பட்டவர்கள் சிறு தெய்வங்களாக மிகப்பழங்கால முதலாக வணங்கப்பட்டு வந்தார்கள். காத்தவ ராயனும் அவ்வாறே வணங்கப்பட்டிருக்கவேண்டும். எனவே கழுவேற்றப்பட்டசெய்தியை மறைக்க முடியாமல், உயர்சாதியினர் காத்தவராயன் கடவுள் சாபத்தை நிறைவேற்றுவதற்காகத்தானே கழுவேற முன்வந்தான் என்ற செய்தியைப் புனேந்தனர்.

உண்மைச் செய்திகளின் ஆற்றலேக் குறைக்க இத்தகைய முயற்சி களே உயர்சாதியினர் பலமுறை செய்திருக்கிருர்கள். நந்தன் கதை யில் அவனே சோதியில் கலந்துவிட்டான் என்று கூறப்படுகிறது. ஆனல் அவன் பிராம்மணரால் கோயில் முன் எரிக்கப்பட்டான் என்று உறுதியாக நிருபிக்கலாம். இதுபோலவே காத்தவ ராயனேக் கழுவேற்றிவிட்டு அவனே வேண்டிக்கொண்டதாகக் கதையை மாற்றிவிட்டிருக்கவேண்டும்.

பறையனுன காத்தவராயனே பிராம்மண குலத்தில் பிறந்து மூன்று நாள் பறைச்சி முலேப்பால் குடித்ததாக இக்கதை கூறுகிறது. இதனல் தேவனுன காத்தவராயன் இவ்வுலகப் பிறப்பிலும் மனு தர்மம் மாருமல் ஆரியமாலே என்ற பிராம்மணப் பெண்ணே மணந் தான் என்றுகூறி சாதியைப் பாதுகாத்துக் கொள்ள கதை முயலு கிறது. வேறு சாதிப்பெண்களே மணந்து கொள்ளுவது மனுதர் மப்படி குற்றமல்ல. பிராம்மணன் தனது வர்ணத்திற்குக் கீழே யுள்ள வர்ணங்களில் பெண் கொள்ளலாம். அதன்படி காத்தவ ராயன் தவறு செய்தவனல்லன். பறையன் என்று சொல்லிக் கொண்டு பிராம்மணப் பெண்ணே அழைத்துச் சென்றதுதான் மனுதர்மப் படி குற்றம்.

ஆனுல் காத்தவராயனே மனுதர்மத்தை தனக்கு முன் மீறிய மும்மூர்த்திகள், முனிவர்கள் கதைகளேக் கூறித் தான் செய்தது தவறல்லவென்று வாதிக்கிருன்.

இவையெல்லாம் நாட்டுப்பாடல் கதையின் பழம் பகுதிகள். தனக்கு நற்புத்தி புகட்டவேண்டும் துஷ்டருக்குச் சொன்ன நீதி பயன்படாது என்று தன்னைத் துஷ்டனென்று கூறிக் கொள்கிறான். இப்பகுதி கைலைவாசம், சகுனக்கதை இவற்றை பிற்காலத்தில் புனைந்தவர்கள் சேர்த்து விட்ட பகுதிகளாகும்.

எனவே கதையின் பழைய பகுதியும், நாட்டுப்பாடல் வடிவில் மக்கள் போற்றிய கதைக் கருவும், காத்தவராயன் துணிவாக மனுதர்ம அநீதியை எதிர்த்துப் பிராம்மணப் பெண்ணை மணந்ததும், அதற்காகக் கழுவேறிச் சாகத் துணிவு கொண்டு வளர்ப்புத் தந்தை கையில் அகப்பட்டதுமே.

தான் குற்றவாளியல்லவென்று அவன் வாதிக்கும் பகுதிகளே பழமையானவை.

தன்னைத்தான் துஷ்டன், குற்றவாளி என்று கூறிக்கொள்ளும் பகுதிகள், உயர்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள், சாதி உயர்வைப் பாதுகாக்க முயன்றவர்கள், சேர்த்ததுதான். கதையின் இவ்விரு பகுதிகளையும் ஆழ்ந்து படிப்பவர்கள் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

முத்துப்பட்டன் கதையிலும், பொம்மக்கா, திம்மக்கா என்ற இரண்டு பெண்களும் சக்கிலியப் பெண்களல்லர் என்றும், அவர்கள் பிராம்மணப் பெண்களென்றும் கதையை மாற்றிய செய்தியை முத்துப்பட்டன் கதை ஆய்வுரையில் கூறியுள்ளேன்.

அதுபோலவே சமூகச் சீர்திருத்த ஆற்றல் கொண்ட இலக்கியங்களை அழிக்கவும், மாற்றவும், சிதைக்கவும், மேல் சாதியினரும், சீர்திருத்தங்களால் தம் செல்வாக்கை இழக்கக் கூடியவர்களும் முயன்று வந்திருக்கிறார்கள்.

எனவே நாட்டுப் பாடல் கதைகளைப் படிக்கும் போது நாட்டுப் பாமர மக்கள் கண்ணோட்டத்தில் யாரைக் கதைத்தலைவர் தலைவியராகக் கொள்ளுவார்கள் என்பதை மனத்தில் கொண்டு, அவர்களது விடுதலை ஆர்வத்தையும் மனத்தில் கொண்டு கதைக் கருவினைப் பிரித்தறிய வேண்டும். பாமர மக்களது சிந்தனைகளை அடிமைப்படுத்தும் முயற்சிகளை எடுத்துக்காட்டவேண்டும்.

ஆராய்ச்சியாளர்கள் முயன்றால் கதைப் பாடல்களில் நாட்டு மக்கள் படைப்பான பகுதியையும், அதற்கு முரணான இடைச் செருகல்களையும் எளிதில் அறியலாம்.

# நன்றியுரை

நாட்டுக் கதைப் பாடல் வரிசையில் சில நூல்களை வெளியிட மதுரைப் பல்கலைக்கழகம் முன்வந்துள்ளது. துணைவேந்தர் தெ. பொ. மீ. அவர்கள் நாட்டுப் பாடல்களையும், நாட்டுக் கதைப் பாடல்களையும், வாய்மொழி இலக்கியமாகவும், இலக்கியத்தின் இரண்டு ஓடைகளில் ஒன்றெனவும் கருதுகிறார்கள். அதனால்தான் இவ்வெளியீடுகளைக் கொணர முயன்று வருகிறார்கள்.

அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். தமிழகமும் இச்சீரிய பணிக்காக அவர்களுக்கும், மதுரைப்பல்கலைக் கழகத்திற்கும் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

பாளையங்கோட்டை
21-9-70

நா. வானமாமலை
பதிப்பாசிரியர்

## கதைப்பாடல்

சமையமெனும் கோமுதலைப் பாருதனில்
தாளெளிக்கந் நயங்கி யுள்ளம்
அபையமென வேதியர்கள் அரசனிடம்
முறையிடவே அவர் வந்தாரே.

கையிலே குலையும் பிடித்துக்
கதறியே மறையோ ரெல்லாம்
அய்யமார் பூணூல் குடுமி
அறுத்துச் கொண்ட பயமிட்டு

"செய்யனே; சீமை யாளும்
தீரனே! ஆரியப்பா!
அய்யனே சிறை யெடுத்தான்
ஆரென்று கேட்பீர் நீரே."

வசனம் : ராஜாதிராஜா ராஜபரமேஸ்வரா ராசமார்த் தாண்ட ராச ஒய்யார அரசுபதியாக திருசிரபுரம் ஆளப்பட்ட ஆரியப்பூராசனே பிருதய்யா பிருது.

நடை

வேதியர்கள் தன்முறை விளம்பியந்த ராசனவர்
ஆதி மறையவர்க்கு அன்பாய் நமஸ்கரித்து'

"ஏது மறையவரே இறைவரியால் நொந்ததுண்டோ?
மாது சிறைபோனதுண்டோ? மாடாடு சேதமுண்டோ?
விள்ளவே எந்தனுக்கு விரும்பி உரையுமென்றூர்"

"கேட்டிடுவீர் எங்களுட பிராது தன்னை
கிளிமொழியாள் நானின்ற மாலை தானும்

நாட்டமுடன் குடமெடுத்து தண்ணீர் மோர்க்க
நடந்தாள் காண் கொள்ளடத்து நதியை நாடி

வாட்டமில்லா சேப்பிளையான் மகனில் லாமல்
வளர்த்தான் காண் பிரமய்லே மகனென்றே தான்

தேட்டமொடு காத்தவனும் அவன் பேர்தான்
சிறையெடுத்தான் எங்கேயென்று தேடு வீரே"

அய்யர் சொல் விருத்தம்.

"தேடியே நீரவனைப் பிடித்து உந்தன்
தேசமது அறிந்திடவே கழுவி லேற்றி
பாடியே அவனுயிரைக் கொல்லா விட்டால்

பாராளும் ராசனென் றெண்ண வேண்டாம்
நாடியே கோட்டை மதிலேறி நாங்கள்
நலமுடனே இறந்திடுவோ மென்ன'' ராசா
ஆடியே பதறியுள்ளம் அய்யர் பாதம்
அடிபணிந்து அரசனுமே அருள் செய்வானே

ராசன் சொல் விருத்தம்

“திட்டமுடன் வேதியர்கள் சொல்மொழி யழிந்துவிட்டால்
பாராளும் ராசனென் றெண்ண வேண்டாம்
இஷ்டமுடன் உங்கள் மனதின்படி செய்திடுவேன்
தெட்டிச் சிறையெடுத்ததொரு காத்தவனை தேடி
கட்டியே மட்டக்கழுவில் ஏற்றுவேனே''

வசனம் : ஆகோ கேளும் மாமறையோர்களே உங்கள் பெண்ணாகிய ஆரியமாலையைச் சிறையெடுத்துப் போன காத்தவனை ஒருவாரம் ஏழுநாளையில் தேடிபிடித்துக் கழுவில் போட்டு வைக்கிறோம். உங்கள் ஆச்சிரமத்திற்குப் போங்களய்யா சாமி.

தூதருக்குச் சொல் விருத்தம்

''தூதரே சொல்லக் கேளீர்
துணிவுடன் ஆலம் பாக்கில்
நீதியாய் வாழு மந்த
நிறைந்த சேப்பிளையான் தன்னை
சேதியைச் சொல்லி நீங்கள்
சீக்கிரம் அழைத்தோ மென்று
ஓடியே நீங்கள் கூட்டி
ஒருநொடி தன்னில் வாரீர்''

ராசன் சொல் வசனம் : ஆகோ வாருங்கள் தூதர்களே பாதி காவற்கு அதிபதியாகிய அரசு காவல் சேப்பிள்ளையானை அழைத்து வாருங்கள் தூதர்களே

தூதர் சேப்பிளையானுக்குச் சொல் விருத்தம்.

தேசமே பாதி காவல்
சேப்பிளை யானே கேளாய்
ராசனும் ஆரியப்பன்
நலமுடன் உந்தன் மீது
நேசமும் தவிர்ந்த திப்போ
நெடிதுடன் கோப மாகி
போசனும் அழைத்தா ரிப்போ
பொடுக்கென ஓடி வாரீர்.

**தூதர் சொல் வசனம் :** ஆகோ கேளும் அரசுகாவல் சேப்பிளை யானே ஆரியப்பூ ராசனவர் ஒன்னை அதிக சீக்கிரமாய் அழைத்து வரச் சொன்னார். வாருங்கள் சேப்பிளையானே. அப்படியே மகா பாக்கியமய்யா.

சேப்பிளை சொல் விருத்தம்

"அழைத்திடும் தூதா கேளாய்
ஆரியப் பேந்திர மன்னன்
தழைத்திட அழைத்தா ரென்றீர்
தானுமே வாரே னென்று
வளர்ந்திடும் புரவி யேறி
மன்னவன் முன்னதாக
பிழைத்திட கைவாய் பொத்தி
புகலுரை செய்கு வாரே.

தூதர் ராசனிடம் சொல் விருத்தம்

செந்திருவை ஒத்தமதி சந்திரகுல சேகரா
தீரனே வெகுபராக்கு,

ஸ்ரீரெங்கரடி பணியும் திரிசிரகிரி மேவும்
செய்யகுண வெகுபராக்கு.

அந்திமதி சூடிய நந்தியிடம் அருள் பெற்ற
ஆரியா வெகுபராக்கு.

அகிலாண்ட வல்லியொரு முகில்பூண்ட சேகரா
அண்ணலே வெகுபராக்கு

எந்தநாளும் எங்கள் குலம் ஆல்போல் தழைத்திட
அருள்பவா வெகுபராக்கு

எந்தனுக்கு அரசாக தீரவா சகமுதல்
ஈந்தவா வெகுபராக்கு

உந்தனுட தூதர்கள் உரைசெய்ய யானுமே
ஓடியே வந்தேனய்யா

உத்தமனே யானடியேன் ஏதுகுறை செய்தாலும்
உகந்தென்னை இரக்ஷிப்பீரே"

**நடை**

**"அகமுத்தமே சொரியுமெங்கள் ஆரியப்பூ ராசேந்திரா**
**அகமுத்தமே படைத்த துரையே உமைப்பணிந்தேன்**

தாப்பரியமாக உந்தன் சமுகத்தில் வாய்ப்புதைத்து
சேப்பிளையான் சொல்ல செவிகொடுத்து நீர்கேளும்.

மாற்றலரை வென்ற மகராசன் ராசேந்திரா
கீர்த்திப் பிரதாபமுள்ள கிருபா சமுத்திரரே

தங்கமகா மேருவே, சகல சாம்ராச்சிய யோகமுள்ள
சிங்காதனக் கொலுவில் நீர் தேவேந்திரனுக் கிணையாய்

வேதப் பிரதாபம் மிகுமறைநூல் வல்லவர்க்கு
நீதிப் பிரதாபமுடன் நீயே கொடைக்கர்ணன்.

சங்கரனு மாமுதலா சதுர்முக பிர்மா[1] அடியார்
தாங்கள் களிக்க அளித்திடும் வாரிதியே.

கல்விக் கரசே கருணைப் பிரதாபமுள்ள
செல்வத்துரையே உலகம் செழிக்கவந்த சீமானே.

கரருச மார்த்தாண்ட கண்டப் பிரசண்டனல்ல
பரருசர் கொண்டாடும் பாக்கிய மகருசேந்திரா.

அடியார்களுக் கென்று அதிககலி தானோட
மிடிதீர்க்க வந்த முகிலையொத்த கையோனே.

பொய்யாத வாசகனே! புண்ணிய சிரோண்மணியே!
மெய்யாக தேசம் விளங்கவந்த சீமானே!

வாருமையா ராசாவே ஒருவசனம் உரைக்கின்றேன்
பாருமையா யானடியேன் பணிந்து உரைக்கின்றேன்

மாத்தாம லெப்போதும் மானம் அபிமானம் வைத்து
பாத்தோர்கள் மெச்சிடவே பாதி காவலுங் கொடுத்தீர்

அருமையுடன் எங்களுக்குஅரசுகாவல் கொடுத்தீர்.
பெருமையுடன் எங்களுக்குப் பேரரசுங் கொடுத்தீர்

கொப்புடனே எங்கள்குடி குலமெல்லாம் தழைக்கவே
சேப்பிளையான் காவலென்றால் சீமையெல்லாம்
கொண்டாட

பேரும் கொடுத்தீர் பெரியதளமும் தான்கொடுத்தீர்.
ஆரும் மதித்திடவே ஆண்மைகள் உண்டாக்கிவைத்தீர்.

சாதரிப் பாகுடனே சால்வையுமே கொடுத்தீர்.
மாதரி பாகுடனே வல்லவாட்டுமே கொடுத்தீர்.

காதுக் கிசைந்த கடுக்கண் அரணவுடனே
தாதும் புனல்மார்பா சரப்பளியுமே கொடுத்தீர்[2]

மதித்த சந்திராதி யுதித்தவளர் கல்லுங் காவேரி
உதித்த புல்லும் பூமிகளும் உள்ள நாள் எத்தனையோ

அத்தனை நாளைக்கும் அரசுகாவலும் கொடுத்தீர்
பெத்தாய் செய்திடினும் பிழைதாளாய் புண்ணியனே

புண்ணியா திரிசிரபுரத் ததிபதியே பேராளா
என்னும் சுகத்தில் இருக்குமெங்கள் ஆண்டவனே

ஆண்டவனே பூலோகம் ஆரியப்பூ ராசேந்திரா
வேண்டும் பணிவிடை செய்ய விண்ணப்பம்
தெண்டமய்யா

நந்திதிரு வோங்கி நாதர்மலைக்கும் கிழக்கு
பந்துசனம் ஆலம் பாக்கத்திற்கும் நேர்மேற்கு

இதைச் சேர்ந்த கிராமமெல்லாம் என்னுடைய காவலய்யா
மதுரைக்கும் கிழக்கு வல்லம் தஞ்சா வூர்க்குமேற்கு

மொழிக்கு மொழிதவருத முத்திளையான் காவலய்யா
சொன்ன மொழி தவருதன் தோகைமலைக்கும் கிழக்கு

பொன்விளைந்தாம் பட்டிவரைக்கும் பொன்னிளையான்
காவலய்யா
முத்திளையான் பொன்னிலையான் முடிபெருத்த சேப்பிளை
யான்

**சேப்பிளையான் சொல் விருத்தம்**

செந்திரு வல்லி மார்பா
திருசிர கிரிநா டாளும்
சுந்தர மதன ரூபா
சோம சேகரனே போற்றி
அந்தணர்க் கருளும் செம்பொன்
ஆரியப் பேந்திர மன்ன
எந்தனை அழைத்த சேதி
இன்னதென் றியம்பு வாயே.

**வசனம:** ராசாதிராசா ராசபரமேஸ்வரா ராசமார்த் தாண்டா! நல்லார்க்கு மித்ரு! பொல்லார்க்குச் சத்ரு! வித்தையில் சரஸ்வதி! புத்தியில் பிரகஸ்பதி! அதிபதியாய் திருசிரபுரம் ஆளப் பட்ட ஆரியப்பூ ராசேந்திரா! பராக்கு. எச்சரிக்கை. அடியேனை அழைப்பித்த காரியம் அருளிச்செய்ய வேணும் சுவாமி?

மன்னன் சொல் விருத்தம்

"வடகரை நாடு காவல்
வல்லசேப் பிள்ளையான் கேளாய்!
துடியிடை மாது புத்தூர்
சோமாசி பட்டர் பெற்ற
மடமயில் மாது தன்னையுன்
மகன்சிறை யெடுத்தொளித்ததாக
வடமொழி மறையோ ரெல்லாம்
வகையெனக் குரைசெய் தாரே"

வசனம் : ஆகோ கேளும் அரசுகாவல் சேப்பிள்ளையானே, குணசில மங்கலம் புத்தூர் சோமாசி பட்டர் மகளாகிய ஆரிய மாலையை உன்மகன் காத்தவராயனுனவன் சிறையெடுத்துப்போன தாக வடகரை பிருமணுள் ஆதியந்தமும் நம்மிடம் முறை யிட்டார்கள். அப்படி நம் காலத்தில் செய்யலாமோ? சேப்பிள்ளை யான்!

சேப்பிள்ளையான் சொல்விருத்தம்

அருமறை புகழ வாழும்
ஆரியப் பேந்திர மன்னு!
மருமலர்ப் புத்தூர் தன்னில்
மாலையை எனது மைந்தன்
சிறையெடுத் தொளித்த தாகத்
தேவரீர் சொல்லக் கேட்டேன்
கருவுடன் எங்கும் தேடிக்
கட்டியே தருகு வேனே"

வசனம்: ஆகோ கேளுங்கள் அய்யா சாமி ஆரிய மாலையை என்மகன் சிறையெடுத்து ஒளித்ததை யானறியேன். அப்படி உண்டானுல் சமூகத்தில் கட்டித் தருகுவேன் அய்யா சாமி.

நடை

நாட்டுப்பாடல்

சேப்பிள்ளையான் கூற்று

ஆரியப்பூ ராசவே ஆண்டவனே கும்பிடுறேன்!
காரியமாய் கேட்டருளும் என் கர்த்தாவே சொல்லு
கிறேன்

என்னுடைய காவலென்ருல் எமனும் வந்தண்டானே
உன்னுடைய தேசமதில் உத்தமனே ஆரியப்பா.

கரும்பிலே முத்தீனும் கட்டழகன் காவலிலே.
அரும்பும் குலையாது அப்படியே பூத்துநிற்கும்.

அட்டம் சுளியாது அசல்காற் றடிக்காது.
சிட்டுப் பறவாது ' சேப்பிளையான் காவலிலே.

பட்சி பறவாது பொன்னிளையான் காவலிலே.
ஆட்சி பெருகிவரும் அய்யருட சீமையிலே.

நித்த மகிழ்ந்திருக்கும் முத்திளையான் காவலிலே.
சுத்த மிகப்பெருகும் தேவரீர் காவலிலே.

சத்திய வாசகமாய் தழைத்து மிகப்பெருகும்
கொத்தரளிப் பூவின் கொடியும் வதங்காது.

கற்பூர தீபம் கலந்து மிகவெரியும்.
இப்படியாக இருக்குமையா என் காவல்.

"பெற்றவரைப் பேயாக்கும்" பிள்ளையென்ற வாதுபோல்
கற்றவரைத் தான்பழிக்கும் கசடரென்ற வாய்
மொழியோ

வளர்த்தவரை வாயழிக்கும் மைந்தரென்ற வாருதியோ
தழைந்தபுகழ் மன்னவரே சாற்றுகிறேன் கேளுமினி

பிள்ளை மனதுதனைப் பெற்றோர்கள் தானறியார்.
கள்ளவிழி மாதர்மனம் கண்டறியப் போகாது

மைந்தன் மனதுதனை வளர்த்தோர்கள் தாமறியார்.
அந்தமுள பெண்மனதை அறியவே போகாது

படிமேல் சிறையதுதான் பற்றி அவனெடுத்தால்
அடியேன் அறிவேனே அப்படியே அவனெடுத்தால்

ஊருக்காகாத பிள்ளை உகந்துபெற்ற பேர்க்காமோ
ஆருக்கும் ஆகாதாம் அவன்செய்த குற்றமதை

உண்டெனவே பண்ணிவைத்தால் உகந்தடியேன் கூட
நின்று
இன்றுயிர்த் தூண்டியிலே ஏற்றிவைக்க நான் வாரேன்

சேப்பிளை விருத்தம்

மண்டலத் தரச ரெல்லாம்
வந்துன் சமுகம் தன்னில்
தெண்டனிட் டுனது கீர்த்தி
செயலுடன் கூறுங் கோவே

அண்டரும் புகழ வாழும்
ஆரியப் பேந்திர மன்னா
கண்டித மாகக் கூறும்
காரியம் உரைசெய் வீரே.

வசனம் : ஆகோ கேளுங்களய்யா சுவாமி அடியேன் சொல்ல வேண்டிய நீதிமார்க்கத்தைச் சொன்னேன். இனி கட்டளை உத்தர வின்படி நடக்கிறேன் ஐயா சாமி.

"உத்திரவு கேட்டதொரு சேப்பிளையே
யானுனக்கு உகந்து சொல்வேன்
பத்திரமாய் வளர்த்த பாலனெனவே
பாராதே பார்த்தா யானல்

குத்தமுமே வருமுனக்குக் குவலயத்தில்
எனக்கரசு கோனும் கோவே
சத்தியமாய்ச் சொன்னேனுன் தனயனையும்
நீபிடித்துத் தருகு வாயே"

நடை

நாட்டுப்பாடல்

மன்னவன் கூற்று

சேப்பிளையான் சொன்னதற்கு திட்டமுடன் ராசாவும்
தாப்பரியமாகத் தான்வார்த்தை யிது சொல்வார்

"வாரும்பிள்ளாய் சேப்பிளையே ஒருவசன முரைக்கின்றேன்
ஆரும் மதித்திடநான் அதிகாரம் உந்தனுக்கு

பாரு முதலாகப் பாதிகாவல் உந்தனுக்கு
சாரும் பதிமுழுதும் சலுகை இருக்குதென்று
நூறுமலர்ப் பூங்குழலை நாமே சிறையெடுத்தோம்

கோலப் புள்ளிமீது குடியே இருக்குமோதான்
வேலி பயிரழித்தால் விளைகிறது எப்படித்தான்

பெற்றபிள்ளை யானாலும் யின்னொருவன் ஆனாலும்
குற்ற மதைக் கண்டளவில் கொன்றுவிட வேண்டாமோ?

ஆவலுடன் பிள்ளையென்று ஆக்கினை செய்யாதிருந்தால்
காவல் கட்டுப்படுமோ? கண்டவர்க்கும் ஏற்காது

நீதியல்ல உந்தனுக்கு நானிலத்தோர் தான்சிரிப்பார்
பாதிகாவல் உந்தனுக்கு பட்டமது கட்டிவைத்தோம்

கோதிலா மாமறையோர் கொம்பனையாள் மாலையரை
நிறையதாய் வளர்த்தருளும் நின்மகன் காத்தவனே

சிறையே எடுத்தவனும் தேசம்விட்டுப் போனானே
தேசம் விட்டுப்போனாலே தேடவே வேண்டாம்போ

நம்முடைய ராச்சியத்தில் நலமாக வீற்றிருந்தால்
செம்மையல்ல நம்முடைய செங்கோலுக்கே. அதுவும்

இத்தேசம் தனிலே இருப்பானே யாமாகில்
சுற்றி வளைத்துச் சூரன் தனைப்பிடித்து

வெற்றியுடன் கொண்டுவந்தல் வேணு மரியாதையுண்டு
இஷ்டமுடன் தந்திடுவோம். இடராக நீயிருந்தால்

சட்டமுடன் உன்னையுநான் சரியாய்க் கழுவதனில்
திட்டமுடன் ஏற்றிவைப்பேன் சேப்பிளையே நீர்கேளும்

சேப்பிளை விருத்தம்

நாட்டிலே மூவர் நாங்கள்
நலமுடன் ஆலம் பாக்கில்
போட்டியாய் எதிர்த்த பேரை
பொருதுடன் விருது வாங்கி

மேட்டியே எனவ றிந்தீர்
மெச்சியே காவல் தந்தீர்
தெட்டற் களவுக் கெல்லாம்
தெரிந்துயான் தருகு வேனே.

நடை

ஆரியப்பூ ராசனையும் அடிபணிந்து சேப்பிளையான்
காரியமாகவே தான் காத்த பரிமணத்தை

தேடிப் பிடிப்பதற்கு சேனைபடை கூட்டி
நாடி ஒருவாரம் நாளையிலே நானடியேன்

திக்குத் திசைதோறும் தேடியே யானடியேன்
பக்கமுள்ள நாடு பட்டிணங்களைப் பார்த்து

ஸ்ரீராமர் தேவியர்க்காய் தென்னிலங்கை தூது சென்ற
மாருதி ரூமியர்க்கு வாகனமாய் நின்றருளும்

அஞ்சனா தேவிமைந்தன் அடிபிடித்துப் போனாற்போல்
இச்சையுடன் பெண்ணவளை எடுத்தோடிப் போனவனை

என்னியொரு வாரமதில் எப்படியும் நான்பிடித்து
நன்னுமுயிர்த் தூண்டியிலே நான்போட்டு
வைக்கின்றேன் பார்.

சேனைபடை கூட்டிச் சேப்பிளையான் அப்போது
ஆனைபடை மன்னருடன் அரசனையும் தெண்டனிட்டு

வெற்றித் தமுக்கடித்து வெங்கலக் கொம்பூதி
மெத்தெனவே கோட்டைவாசல் வெளியே வந்துநின்று

மற்றுநிகர் ஒவ்வாத மைந்தன் பரிமணத்தை[5]
சித்தமதில் எண்ணித் தேவியர்க்குச் சொல்லுகிறுன்

வீரரையும் தான்கூட்டி விரசுடனே சேப்பிளையான்
திருவரங்கம் பேட்டை தன்வீடு வந்து சேர்ந்து

சேப்பிளையான் மனைவியிடம் சொல்லுகிறுன்

சங்கப்பிள்ளை[6] ஆகியதோர் தையலரே கேட்டருள்வாய்
"வக்கணையாய் நாம்வளர்த்த மைந்தனுர் செய்தபிழை

என்னவென்று சொல்வேன்யான் இயல்பான மனைவியரே
தண்ணீர்த் துறையில் தானே சிறையெடுத்துப்

போனதொரு காத்தவனைப் பிடித்துக் கழுவில்போட
ஆனதிறல் மன்னவனுர் அனுப்பிடவே வந்தேன்டி.

ஏவும் பணிமுடிக்க என்றுலாகுமோ தான்
காவலனுர் சொல்லைக் கடக்கவும் போறதில்லை"

புருஷனது சொல்லப் பெண்கொடியாள் சங்கப்பிள்ளை
வருசைமகன் செய்தபிழை மனசுமிகத் தான்வாடி

மனைவி கூற்று

"கண்ணுளா! கட்டழகா! காத்த பரிமணமே
பண்ணுத சாரியமாய் பாப்பாரப் பெண்தனையே

ஆற்றில் சிறையெடுக்க லாகுமோஇக் காலந்தன்னில்
காத்தவனே உன்னைநான் கனமாய் வளர்த்தேனே"

அழுதவளைச் சேப்பிளையான் அகங்கையாலே அமர்த்தி
"பழுவந்த பின்பு பாடியழுதால் போமோ

தேவிதனைக் கையால் சேர்த்தே யெடுத்தணைத்து
ஆவிதனை விட்டதனுல் ஆவதுண்டோ?

பின்புத்தி தான்நினைக்கும் பறச்சிபெத்த[7] பிள்ளைவயன்
நாம்பெத்த பிள்ளையென்றுல் நம்மைப்போல் ஆகாதோ?

முன்னவன் கையில் முறிகடனே பட்டிருந்தோம்
மின்னாளே நீயழுக வேண்டாமென" உரைத்து

சேனைபடை கூட்டிச் சேப்பிளையான் அப்போது
ஆனைப்படையைப் பார்த்துச் சொல்லுவான் ஓர்வசனம்

சத்திபதி சித்தமுடன் உத்தரவு பெற்றருளி
தம்பியர்கள் மூவருடன்

உதிர்பெற்ற கோட்டையது மேல்வாசல் வழிசென்று
தனசேகரத் துடனே

சத்தர்முதல் மொழிபெற்ற உறையூர் தென்னூரோங்கு
வளர்ப்புத்தூர் தனிலிருந்து

போதமுடன் வெங்கலக்கொம் புகள்பிடித்துப் புகழ்பெற்ற
முரசு அறையவும்

வித்தரண சூரர்கள் வித்தரணிகள் புகழ்
வெற்றித் தமுக்கடித்து

வீரானகம்ப ரசம்பேட்டை முதலாக மேல்முகம்
சாலை வழியாய்

மத்தமுடி ராசாக்கள் வழக்கைப் பிரித்திடும்
மதுகரைக்கும் கிழக்கு

வளர்தோகை மலைமுதல் பொன்விளைந்தாம் பட்டிவல்லம்
தஞ்சாவூர் முதல்

சுத்திவர வீரர்கள் காவேரிக் கரையிலும்
சர்க்கார் பாளையத்திலும்

சிறந்த தேவதானப்பட்டி திருச்சிறுர் தேரோடும்
வீதி தனிலும்

பக்தர்கள் பட்டிணம் தன்னிலும் பாலக்
கரை முழுதும்

பரிவுடன் தாராநல்லூர் வரகநேரி பக்தர்கள்
முத்த மதிலும்

நதியேவட கரைசுற்றியே தேடியும் நந்திதிரு
வேங்கி வரையிலும்

நலமான அரியலூர் வயிரசெட்டி பாளையம்
நலமுதவும் சங்கேந்தியும்

ஏத்தியே தன்னரசு பாதிகாவல் சீமையெங்கும்
தேடியும் என்மகனைக் காணேனே 8

எதிர்கொண்ட காத்தன்பதி கொண்ட ஊரெல்லாம்
எங்கெங்கும் தேடுவனே.

வசனம் : ஆகோ வாருங்கள் தூதர்களே நான் சொல்லிய இடமெல்லாம் தேடவேண்டும் தூதர்களே. இப்போது எங்கே தேடுவது என்றால் திரிசிரபுரத்திற்கும் மேற்கு, மதுகரைக்கும் கிழக்கு, பாண்டியனூர் எல்லைக்கும் வடக்கு, காவேரிக் கரைக்கும் தெற்கு இதில் உள்ள கிராமங்கள் எல்லாம் தேடிப் பார்ப்போம் வாருங்கள் தூதர்களே.

நடை

(நாட்டுப்பாடல்)

உறையூர் தென்னூர் தங்கிவளர் புத்தூர்வரை
பெருகும் உய்யக்கொண்டான் வயலூர் குழுமணியாம்

சோமரசம் பேட்டை அடியிடைபால் நங்கபுரம்
சாமரசம் பெருகும் கம்பரசம் பேட்டைமுதல்

அல்லூர் பழூர் அனலை கொடியாலம்
புல்லூர் வடசேரி பொய்யாமணி மருதூர்

இலுப்பூர் தவத்தூர் எலிமங்கலம்
வளம்பெருகு பெருகமணி வய்யநல்லூர் மணித்திட்டை

முருங்க ளத்தூர் முத்தரச நல்பேட்டை
சித்தவரை வென்ற சிறுகமணி கள்ளபுலி

கொச்சி திருச்சி குண்டுலவு மணப்பாறை
நேசர் பரவுகிற ரெத்னகிரி தொகைமலை

கடம்பவனம் ராசேந்திரம் கருப்பூர் மேல்குடியும்
கட்டளை மணவாசி காகிஷ்ட்ண ராயபுரம்

சித்தர் தொழுதருளும் திருப்பிலாத் துறையழகர்

அரும்புமலர்ப் பூச்சொரியும் ஆதிபனங் காவேரி
கரும்பாயி சன்னதியும் காமநாய்க்கன் பாளையமாம்

பூசுரர்கள் கொண்டாடும் பொன்னி நதிக்கரையும்
ராசகம்பீர வளர்நகர் காவல் சேப்பிளையான்

சுற்றினோம் தெனகரையில் திருச்சினாப்
பள்ளிமுதல் சிறந்த மேற்கில்

சுற்றினோம் மதுகரையில் பாண்டியாறு
ரெல்லைமுதல் பார்த்து வந்தோம்

இத்தனையும் தேடவந்து மென்மகன்
காத்தவனைக் கண்ட தில்லை,

கொத்துமலர் பூத்துநிற்கும் கோனாடு
தேசமதைக் கோலு வோமே

வசனம் : அகோ வாருங்கள் சேவகர்களே, திரிசிரபுரத்திற்கு மேற்கு, மதுகரைக்கும் கிழக்கு தேடிப் பார்த்ததிலே காத்தவனைக் கண்ணிலே காணோம். பட்டணத்தைப் பார்ப்போம் வாருங்கள்

நடை

சிங்காரத் தோட்டம் செந்நெல் பயிர்நிலங்கள்
மங்காத பூஞ்சோலை வாழை கமுகுபிலா

செங்கரும்பு மஞ்சளிஞ்சி தெங்குபிலா பின்னைவனம்
குங்குமம் செவ்வலரி குளங்கள் தடங்கள்

மலைகள் குகைகளெலாம் அலைந்து மிகப்பார்த்து
வலையில் அகப்பட்ட மான்போலவே மயங்கி

தன்னுடன் வரும்படையை தான்பார்த்து ஏதுசொல்வான்

வசனம் : ஆகோ வாருங்கள் தூதர்களே திரிசிரபுரம் முழுவதும் தேடிக் காத்தவனைக் கண்ணில் காணோம். இனிமேல் திரிசிரபுரத்கிற்கு கிழக்கு, தஞ்சை நகர்க்கு மேற்கு புதுக்கோட்டைக்கும் வடக்கு, காவேரிக் கரைக்கும் தெற்கும் இதற்கு உட்பட்ட கிராமங்களையெல்லாம் தேடுவோம் தூதர்களே.

நடை

கோனாடு முல்லக்குடி குவளகுடி ஒட்டக்குடி
வாளாடும் மேலசிந்தாமணி தேவஸ் தானமுதல்

நன்றுலவு தாராநல்லூர் நல்லஇடைத் தெருவும்
வற்றாத பொய்கை மஞ்சத்திடல் வேங்கூரும்

செந்நெல் நதிபரவும் திருவரம்பூர் வீதிவிடங்கம்
கன்னலில் முத்தீனும் கலமலைப்பா குறிச்சி

ஈச்சநாடு மேவும் திருநாட்டன் குளம்
ஆசலர்கள் போற்றும் அரியமங்கல முதலாய்

கூத்தப்பால் நவல்பட்டு கொக்கரசன் பேட்டைமுதல்
வாய்த்த கிளியூரும் மாறுதவாழ்வு பெருகும்

மாசானங்குடி பந்தாளங் கோட்டை பழைய குரிச்சி
நெல்விளைந்து போரேறும் நெறியுள்ள நன்னாடு

பொன்விளைந் தான்பட்டி புதுக்கோட்டை தன்முதலாய்
சீருடனே கீழ்பாதி சிறந்தநொரு வல்லமுதல்[10]

ஊரெல்லாம் தேடிவந்தேனென் உத்தமனைக் காணேனே

சேப்பிளை சொல்விருத்தம்

திருச்சிறுப் பள்ளிமுதல் சிறந்த
தொருகீழ் பாதிதேச மெல்லாம்

விரசுடனே தேடிவந்தோம்
வீரமுடி காத்தவனைக் காணோம்

தரும்பொரு ளாய்ப்பரி மணத்தை
தேடுவதாய் தளத்தி னோமே

வருமெனவே சேப்பிளையான் நடுக்கரை
பார்ப்பதற்கு வருகின்றாரே

**வசனம் : சேவகர்களே தென்கரை முழுதும் தேடிப்பார்த்ததில் காத்தவனைக் காணாமையால் இனிமேல் நடுக்கரையைத் தேடுவோம் வாருங்கள்.**

நடை

பூண்டி தனிலிருந்து புகழுடனே மேற்காக
வேண்டியுடன் ஊர்தோறும் விதவிதமாய்த் தேடுகின்றார்

கோவிலடி அணையும் கிளிக்கூடு கல்லணையாம்
தாவி யணுயணுவாய்த் தான்தேடி வாரார்கள்

உத்தம சேரியிலும் ஓடையிலும் சோலையிலும்
சுத்த மயில்பரவும் தோவூர்க் கரைதனிலும்

பனையவரம் தன்னிலும் பாங்காய் மடந்தனிலும்
இனைய நடுக்கரையில் இருக்கும் கிராமமெல்லாம்

திருவளர் சோலை திருப்பிலா நல்துறையும்
நறுமலர் சூழ திம்மராய சமுத்திரமாம்

வெண்ணாவின் கீழே முளைத்தெழுந்த ஜம்புலிங்கம்
கண்ணுளை கங்கைச் சடையன் திருச் சன்னதியும்

வெள்ளித் திருமுத்தம் மேலூர் மறையவர்க்கு
அள்ளித் தினங்கொடுக்கும் அரங்கர் திருச்சன்னதியும்

மின்னல் இடிபணியும் வீரேஸ்புரத் தில்வந்து
கன்னல் மொழியம்மாள் காமாட்சி சன்னதியும்

சேனை படையுடனே சீரங்கம் நான்தேடி
ஆனை மணிமுழங்கும் அரங்கர் திருச்சன்னதியும்

அனுமார் படித்துறையும் அரங்கர்திருச் சன்னதியும்
பெருமாள் தலைக்கோம்பை பேருள்ள ரங்கர்தலம்[11]

ஆதியாங் கொள்ளிடத்து அருங்கரையின் வெள்ளத்து
ஆணலையும் பெண்ணலையும் அதிர அலம்பையிலே

காண அரிதான கட்டழகன் சேப்பிளையான்
கல்லில் அடியெடுத்தால் தப்படியில் அடியெடுப்பான்

முள்ளில் அடியெடுத்தால் மேட்டில் அடியெடுப்பான்
தண்ணீரில் அடியெடுப்பான் தங்கமுத்துச் சேப்பிளையான்

எண்ணிய இடமதில் எங்கும் அடிபார்த்து
தலைக்கோரை நேர்கிழக்கு சரியாய் நடுக்கரையை

கலக்கமறத்தேடிக் காத்தவனைக் காணுமல்
வாடி மனம்தளர்ந்து மயங்கியே சேப்பிளையான்

ஓடியே வந்து உகந்துகண்டான் ராசாவை.

### சேப்பிளை ராசனுக்கு சொல்விருத்தம்

தென்னாடு காவேரிச் சீமையெலாம்
தேடிவந் தேன்நான் மன்னவனே

மாலையரைக் களவெடுத்துச் சென்ற
மகனையும் நான் காணேனே

பொன்றான பூவுலகில் அவனாலே
யானடியேன் புவியி லய்யா

என்னநான் சொல்குவேன் இப்போ
ராசனுமே எதிர் சொல்வாயே

வசனம்: ராஜாதி ராஜனே தேவரீர் உத்தரவின் பிரகாரம் ஒருவாரம் தென்கரையும் நடுக்கரையும் தேடியும் காத்தவனைக் கண்டிலேன்;நான் என்ன செய்வேன் சுவாமி.

சந்திரசூரியர் தனபதியுள்ளவும் தைரியமுடையதோர் ஆரிய
ராசனும் தன்மனம் பதறி
உந்தனையானும் நிபந்தனையாகவே உயிர்க்கழுவில்
போடுவதோ
உறுதியாய்நீ வளர்த்திடும் பாலனைப் போடுவதோ

சிந்தையில் தோன்றியே வந்திட உன்மனம்
தெரியநீ உரைத்திடுவாய்

சீறிய ராசனும் கூரியவாளொடு சத்தியவாய்
மனமயங்கியே நின்றிடத் தயங்கியே

சேப்பிளையான் தாள்கள் பணிந்திட வாய்கள்
புதைத்திடத் தானுரை செய்குவாயே

வசனம்: ஆகோ கேளுங்கள் அரசுகாவல் சேப்பிளையானே ஒரு வாரமாகத் தேடி காத்தவனைக் கண்ணில் காணேமென்று நம் மிடம் வஞ்ச வார்த்தை பேசுகிறாய். அவனுக்குச் செப்பணிட்ட கழுவில் அவனைப் போடுவதா அல்லது உன்னைப் போடுவதா சொல்லும் பிள்ளாய். சேப்பிளையே.

புத்தமிர்த நிகராத பொறுமையது
பெற்றிடும் புருஷனே ராசசிங்கா

புத்தியில் கற்பக விளிபோல்
விளங்கிடும் புருஷனே ராசசிங்கா

வித்தையில் வெண்தாமரையொத்த
ராசனே புருஷ சிங்கா

இத்தரணி கனகவே யேகாநதியில்
சூரிய விலாசனே புருஷசிங்கா

பெற்றதால் புத்திரர்கள் செய்குற்றம்
பெற்றோர் பொறுப்பது போலவே

புண்ணியா பொறுத்தெனக்கு இன்னமும்
போகவே மூன்று நாளும்

சித்தமாய்நீர் அருள்கொண்டு என்னை
இரட்சியும் திருடனையான் பிடித்துச்

சீக்கிரம் கொண்டு வருகுவேன்
யானுமே திருவடி சரணமய்யா

அவனியம் புகழ வாழும்
ஆரியப் பேந்திர மன்(ன)

கவலையாய் இரண்டு நாடு
காலடி பார்த்து வந்தேன்

குவலைநற சூலை சூழும்
குறைநாடு பார்த்து வாரேன்

நவமணிக் கரசு மூன்று
நாள்மனுக்[12] கொடுத்தருளு வாயே

ராசன் சொல் விருத்தம்

மன்னவனும் மனதிரங்கி வடகரையும்
குறைநாடும் வலைந்து பார்த்து

தென்னவனைப் பிடித்துவந்தால் உனக்குத்
தேவை யுண்டு மரியாதை

சொர்ணமது யான்கொடுப்பேன் இல்லா
விட்டால் அவனேறும் கழுவினிலே

உன்னைமிக ஏத்துவேனே உலகறிய
சத்தியமாயுரை செய்குவனே

வசனம்: ஆகோ கேளும் அரசு காவல் சேப்பிளையானே. இன்னும் மூன்று நாளில் காத்தவனைப் பிடித்துவந்தால் உனக்கு வெகுமதி செய்வேன். இல்லாவிட்டால் உன்னை கழுவில் ஏற்றுவேன்.

நடை

கேசரமாய்ச் சேனையுடன் சேப்பிளையான் அப்போது
வேகமுடன் ஊர்தோறும் விதவிதமாய் தேடுகிறன்

அயலூரர் நேர்கிழக்கு அரியலூரர் நேர்மேற்கு
ஜெயமிருந்திடு முசிரி திருவேங்கி நாதர்மலை

ஆமூர் மணமேடு அழகான தொட்டியமாம்
காமுதலாப் பாரும் குணசீல மங்கலமாம்

சுண்டைக்காய் வெள்ளூர் சோலை மருச்சலங்கத்தான்
வண்டாடும் பூஞ்சோலை வாழ்முதலைப் பாரோரம்

கிளியநல்லூர் மாகானம் கீழ்புறம் சிலையாத்தி
விளிதுயிலும் செந்நூல் மேல்முசிறி மாகாணம்

அத்தாணி நெக்குப்பை ஆன குமரக்குடி

பிட்சாண்டார் கோவில் பேர்பெரிய சன்னதியும்
நச்சரவந் தான்பூண்ட நாதருடன் அம்பலத்தில்

இச்சையும் கூத்தாடும் ஈஸ்வரியாள் சன்னதியும்
பச்சைமயில் பரவும் பாச்சூர் திருவளரை

கன்னைலூர் கீழ்முசிறி கனல்சொரியும் ஓமாந்தூர்
வண்ணச்ச நல்லூர் வயற்செட்டி பாளையமும்

கூத்தூர் பழூர் குறைநாடு பூவாழூர்
நாத்திசையும் கொண்டாடும் நல்லஸ்தலம் சங்கேந்தி

வாய்த்த கிளியூர் வழுதூர் தான்முதலாய்
சென்னநதி பரவும் தின்னயமாம் அரியலூர்

அன்னங்கள் முட்டையிடும் ஆலம்பாக்க முதலாய்
திருமலை வாடி செப்பாய் விசாரநல்லூர்

மருவியே தோன்றும் மான்குடிக்கும் நேர்மேற்கு
பரவும் குறைநாடு வடகரையில் உள்ளதொரு

சத்தரம் வாளாடி தத்தனூர் செம்பழனி
உத்தர மருதூர் ஓங்குதிரு மங்கலமாம்

சித்தூர் லால்குடி செம்பயனூர் தாளங்குடி
பருத்தி வளர்ந்தோங்கும் பல்லவரம் வெள்ள
நல்லூர்[13]

செங்கரும்பு பஞ்சளிஞ்சி தேங்குபிலா பின்னைவனம்
குங்குமம் செவ்வலரி கொளங்கள் தடங்கள்

கொளங்கள் தடங்கள் குறைநாட்டில் உள்ளதொரு
குங்குமம் செவ்வலரி கொளங்கள் தடங்கள்

கங்குல் பகலாக காவிரிசூழ் வடகரையை
எங்கும் அலைந்து வந்தோம் இனியிடத்தைக் காணோமே

விருத்தம்

தேடியே வடகரை யிலுள்ள
தொருசி மையெல் லாமும்

ஓடியே அலைந்து வந்தோம்
என்மகனைக் கண்ட தில்லை

கூடியே கொள்ளடத்துப் படுகைதனை
மேற்குமுகங் கொண்டெல் லோரும்

நாடியே காத்தவனை தேடுதற்கு
என்னுடன் நடந்து வாரீர்

வசனம்: சேவகர்களே இனி நாம் கொள்ளடத்துப் படுகையை மேற்கு முகமாகச் சென்று காத்தவனைத் தேடுவோம் சேவகர்களே.

நடை

கொள்ளடத்துப் படுகைதனைக் கூடியே யெல்லோரும்
தேடியும் காத்தவனைக் கண்ணிலே காணேனென்று

மெள்ள நடந்தார்கள் மேற்கு முகமாக

படுகை முதலாகப் பார்த்துமிக நடந்து
திடுதிடெனச் சேனைதளம் சேர்ந்து மிகத்தேடி

மருச்சலங் காத்தான் வாழ்மூதலைப் பரோரம்
குறித்து மிகவந்து கூட்டமாய் நின்றார்கள்

குத்துநாணல் பாரோரம் கொமுதலைப் பரோரம்
சுத்தி நிறைந்ததொரு சூழ விருட்சமதில்

குயில்கள்து கூவ கொஞ்சுகிளி பாடிநிற்க

மல்லிகையும் செண்பகமும் மலரெல்லாம் பூத்துநிற்க
அல்லி கமலம் அலர்ந்த செந்தாமரையும்

காயா மரங்களெலாம் காய்த்து நிறைந்திருக்க
பூவா மரங்களெலாம் பூத்துச் சொரியுதங்கே

சாம்பிராணி வாசம் சகல பரிமளம்வீசும்
சம்பிரமாகக் கண்டான் அதிசயத்தை

மேகமது கூடி வெயிலை மறைக்கிறதும்
அகமிக மகிழ்ந்திட அனைவோர் புகழ்ந்திட

தென்றல் அடிக்கிறதும் தெய்வ சபைபோல
கண்டானே சேப்பிளையான் காத்தான் இருப்பிடத்தை[14]

ஏது புதுமையிது இதற்குமுன் கண்டதில்லை
மாது தனையெடுத்த வர்ணபரி மளமும்

இருக்குமிடம் இதுதான் இப்போது காட்டுகிறேன்
துருசாக வாருமென்று சுத்தியடி பார்த்தார்.

பூமரமும் பூநிழலும் பூமரத்தின் கீழேதான்
சாம்பரமும் வீசச் சருவி விளையாட

ஆணடியும் பெண்ணடியும் அங்குமிகக் கண்டருளி
ஆணடியைக் கண்டு அளந்து மிகப்பார்த்து

காத்தானுடை பாதமதைக் கண்டு நமஸ்கரித்து
மாலையுடை பாதமதை மகிழ்ந்துமிகத் தெண்டனிட்டு

வாருங்கள் சேவகரே வர்ண பரிமணம்தான்
பாருக்குள்ளே ஓடிப் பதுங்கி யிருக்கிறான்

கண்டவுடன் சேப்பிளைக்கு ஞானமது உண்டாகி
தெண்டனிட்டுத் தோத்திரங்கள் செய்தருளி
வாருமென்று

பாரில் நுழைய பயப்பட்டுச் சேப்பிளையான்
அவர் பேரில் புகழ்ந்து படிக்கிறான் விருத்தமாய்

விருத்தம்

அடியை நாவிருத்தம் கண்டேனய்யா
ஆருதான் பாருக் குள்ளே

துடியதாய் நுழைய நம்மால்
தோத்துமோ தோத்தா தாலே

மிடியதாய் வரும் விபத்தையே
விலக்குவான் காத்தான் வந்து

அடியை நான்தேடி வந்தேன்
அன்புடன் வெளியில் வாரும்

கடியவிஷ முண்டருளும் அரசனுடைய
பாலகனைக் கருத்தில் வைத்து

படியதனில் உனைத் தொழுதேன் பாலகனே
எனக்கு வரும் இடர்தனை நீரும்

சடுதியிலே எனைக்காக்கப் பாரைவிட்டு
ஓடிவந்து சகலோர் காண

விடியக்கதிர் எழுவதுபோல் அடியார்க்கு
முன்தோன்றி விளம்பு வாயே

கலியுகவர தனேபரி மளராசனே
காத்த சுந்தர மய்யனே

வலியுளமன் றினில்கழு வினிலேறிட
மாலை தன்மண வாளனே

புலியெனப் பாரினில் சிலையென
வாழ்ந்திடு மகளரு மணிமார்பனே

உலைதனில் மெழுகென வாடினேன்
எந்தனுக் கருள்செய் வாயே.

ஏறவிட்டு ஏணிதன்னை வாங்குகின்ற [15]
மண்டலம் தன்னிலே என்னைத்

தூரவிட்டு நிற்பதுவும் நியாயமோ
காத்த வனே துலக்கமாக

பாரைவிட் டோடிவந்து கழுவேறிப்
பல்லாண்டு பகர்ந்து கூறு

சாரியிட்ட வாசியின்மேல் எழுந்துவந்து
நல்வாக்குச் சாற்று வாயே.

பாலகனே உந்தனையான் பரிந்தெடுத்து
வளர்த்தேனப்பா பாரில் நீயும்

சாலகனாய் மாலைதனைச் சிறையெடுக்க
ராசனுமே சாட்டி யென்னை

கோலமுடன் உனைத்தேட விட்டதனால்
தேசமெங்கும் தேடி வந்தேன்

ஆலமுண்ட சிவன்மகனே என்னிடரைத்
தீர்த்திடவும் அருள் செய்வீரே

தீர்த்திடுவாய் எந்தனுடை விபத்துந் தன்னை
திருவருளால் மாலைமண வாள னேகேள்

கார்த்திடுவாய் எங்கள் குலம்தழைத் தோங்க
கருணைபொழிந் தருளுவது கடனு னக்கே

பார்த்திடுவாய் எங்கள்பரி தபாந் தன்னை
பாரைவிட் டோடிவந்து பயனைச் சொல்லி

ஏற்றிடுவாய் கழுவேற ஐயா இப்போ
இரைந்தோடி என்னெதிரே வருகு வாயே

ஓடியே அலைந்தேன் நானுன்னைத் தேடி
உலைமெழுகாய் உருகினேன் வாடி வாடி
பாடியே உன்பெருமை கொண்டுயானும்
பகலிரவாய் வணங்கினேன் பரனே கேளாய்
கூடியே மாலையுடன் பாருக் குள்ளே
குடியிருந்தால் உனக்கான என்றால் ஆமோ
நாடியே உன்பாதம் கண்ட பேர்க்கு
நடந்தோடி நல்வசனம் நவிலு வாயே.

பாரினில் உந்தனடியைக் கண்டு பட்சமானேன்
பயங்கரங்கள் விண்டேனப் பாயா னுமினி
பாரில்யானும் ஆரியப்பன் ஆக்கினைக்குப் பயந்து
அலைந்தேனப்பா ஒரு வாரம் உன்னைத் தேடி
விரியமாய் மாலையுடன் பாருக்குள் நீயும்
வீற்றிருந்தால் உனக்கான என்றால் ஆமோ.
ஆரியனே இவ்வேளை என்னைக் காக்க
அடியவர்க்கு முன்தோன்றி அருளு வாயே.

கச்சியுமை பங்காள் ஈன்றருளும்
மைந்தனே காத்தவனே நீவருகவே
பச்சைமலை பதிகொண்ட பார்வதியாள்
பெற்றிடும் பரிமளம் நீவருகவே
பாரேழு லோகமும் தானடிமை
கொண்டதொரு பரிமளம் நீவருகவே
உலகமதிலே இப்பக் கலிகால
தேசிகா உத்தமனே நீவருகவே

இச்சையுடன் என்மனதில் எந்நாளும்
குடியான இலங்குகலி யுகவாணனே
இப்போது என்னுடைய இடர்தனைத்
தீர்க்கவே எதிரேநீ வருகுவாயே.

நடை

நாட்டுப்பாடல்

பாலன்தனை நினைந்து பார்காக்கும் சேப்பிளையான்
சீலன்தனை நினைந்து திகைத்துப் புலம்புகிறான்

அப்பா மகனே என்னருமைத் திருமேனியனே
செப்பார் முலைமாது தெகட்டாத தெள்ளமுதே

பாப்பாரப் பெண்ணை நீ பரிந்து சிறையெடுத்து
தாப்பரியமாகத் காருஷித்து வைத்ததினால்

அரசன் உனைப்பிடித்து ஆக்கினை செய்யவென்று
விரசுடனே சொன்னதனால் வெம்புதே என்மனது

கல்யாணம் செய்து கண்குளிரப் பாராமல்
நிலையாய்க் கழுவிருக்க நெருங்கினதோ காலமிது

அழகை எழுதினவன் அதிர்ஷ்டம் எழுதாமல்
இளமைப் பிராயத்தில் ஏறிக் கழுவிருக்க

முந்தி அரனாரும் முனிந்ததொரு சாபமிதோ
இந்தப் பெருங்கழுவில் ஏறவோ நீயிருந்தாய்

கைப்பிடியாய் நான்வளர்த்த காத்த பரிமளத்தை
எப்படி நான் கழுவில் ஏற்றிவைப்பேன் என்றழுதான்

தத்தளித்து நின்றழுக சாமி பரிமளமும்
மருச்சலங் காத்தான் மாய வடிவாக

குறிச்சமுத சேப்பினைமுன் கோலமறை வேதியன்போல்
சீரான காத்தவனார் சிறிது மனமிரங்கி

தன்னை வளர்த்ததொரு தகப்பனென்று காத்தவனார்[16]
முன்னூல் குடுமியுடன் முன்னாக வந்துநின்று

சாத்திரங்கள் சொல்லுகிறார் தங்கப் பரிமளமும்
தோத்திரங்கள் செய்தருளும் துய்யதொரு மானிடரே

காத்தானுட தன்னடியைக் கண்டீர்கள் எல்லாரும்
இதமுடனே காத்தவனார் இருக்குமிடம் சொல்லுகிறேன்

காய்ச்சி மதுவெடுக்கும் கனத்த பூவாயிமனை[17]
பாச்சூரில் சென்று பாவை பூவாயிமனை

சொன்னீர் களாமாகில் சுகந்த பரிமளத்தை
முன்னாகவே காட்டி முத்துப் பரிமளத்தை

மதுவைப் புகட்டியவள் வர்ண பரிமளத்தை
எதிராகவே காட்டி இனிய பரிமளத்தை

திருடுவாள்காண் பூவாயி தான்போங்க ளென்றுசொன்னார்

கூவாதே சேப்பிளையான் பாரளுகே
குடியிருக்கும் கொடியோன் தன்னை

ஏவாத மக்கள்தனை மூவாத
மனிதனொன்று எண்ணி நீயும்

ஆவாத பிள்ளைதனை ஆரடித்தால்
உனக்காவ தென்ன இப்போ

பூவாயி யனைபுகுந்தாள் காத்தவனைப்
பிடித்திடுவீர் புகழுள்ளோனே

அய்யரருட் பாதமதை அடிவணங்கி
சேப்பிளையான் அவ்விடம் விட்டு

மெய்யனை பார்சூர் பூவாயி
தனைக்கண்டு விளம்பக் கேட்டு

செய்யெனவே சம்மதியாய் காத்தவனுர்
உண்டருள சரக்குச் சேர்த்து

வையகமதில் காத்தவனுர் மதுகுடித்த
வாறதனை செலிப்பேனே.

பூவாயியிடம் சேப்பிளை சொல்விருத்தம்

அம்மையே பூவாயி உன்னிடம் வந்ததை
அருளவே கேளு மம்மா

ஆரியப் பேந்திரன் சேவகர்கள் நாங்களும்
அனுப்பிட வந்தோ மம்மா

செம்மையாய் சீமையைக் காவலும் காக்கின்ற
சேப்பிளை யான்பெற் றெடுத்த

தீரனெனும் காத்தவன் ஆரிய மாலையைத்
திருடியே கொண்டு செல்ல

அம்மொழி கொண்டதொரு ராசனும் கோபமாய்
அவனையே பிடித்து வரவும்

அவனப்பனை அனுப்பிடத் தேடியே காணமல்
அவனுன் மனையில் நித்தம்

கண்மணி காத்தவன் வந்திடும் வேளையில்
கட்டியே எங்க ளிடமாய்

கட்டியே கொடுத்திட்டால் கனகமது நாங்களும்
சனமுடன் தருகு வோமே

இப்படிச் சொல்லியங்கு இருக்கின்றான் சேப்பிளையான்
செப்பமுடன் காத்தவனார் தேவியிடம் ஈதுரைப்பார்

வாருமடி பெண்ணே ஒருவசனம் உரைக்கின்றேன்
பார்தனில் உன்னைப் பரிந்து சிறையெடுக்க

வேதியர்கள் அங்கு வெகுண்டு போய் ராசனிடம்
சேதி உரைத்திடவே சிறந்து எனைப்பிடிக்க

என் தகப்பன் சேப்பிளையான் சீமையெங்கும் தேடுகிறான்
அன்புடனே நானும் அவன்கையில் அகப்பட்டு

கண்டு ராசனையும் கழுவேறித் திரும்பி
உனையழைக்க வருமளவும் கன்னியே பாரதனில்

உண்டு இருமென்று உரைக்கின்றார் காத்தவனார்

காத்தான் சொல்விருத்தம்

அன்புடைய மங்கையரே சொல்லக் கேளாய்
அவருடைய கையிலே யான்சிக் கிடினும்
இன்பமுடன் ராசனையும் கண்டு யானும்
பருங்கழுவில் ஏறிய பின்னுனை அழைக்க
அன்புடனே வந்திடுவேன் அதுவரைக்கும் நீ
அசையாமல் இருமெனவே வெளியில் வந்து
பண்புடனே பாச்சூர் சென்று காத்தான்
பாங்குமதி குடிக்க பயனைச் சொல்வேனே

காத்தான் மதுகுடி விருத்தம்

ராசருட சேவகர்கள் கவிந்ததையும்
பூவாயி நல்ல தென்று
நேசமுடன் சரக்குவகை நிறையச் சேர்த்து
மதுவடிய நிறையக் கட்டி
ஆசையுடன் வைத்திருக்க காத்தவனார்
மதுவருந்தி அவள்தன் வீட்டில்
வாசமுள்ள பூவாயி மதுவுண்டு
மலரணையில் மயங்கினாரே

நடை

மயங்கிக் கிடந்திடவே மங்கையவள் பூவாயி
தியங்கிக் கிடந்தவுடன் தெருவிலே ஓடிவந்து

சொன்னுள் சமயமென சொன்னவுடன் கோடிபடை
மன்னவர்கள் ஓடிவந்து வளைத்துப் பரிமணத்தை

வெறியாய்க் கிடந்துநின்ற வீரியனைத் தான்பிடித்து
கருவிக் கயிற்றுலே கட்டினர் கையிறுக

கையிறுகக் கட்டவே காத்த பரிமளமும்
அய்யமார் கட்டை அறுத்தார் பொடிப்பொடியாய்

கட்டுங் கயிற்றுலே கனமாக வந்த படை
வெட்டு வானென்று மிகவே பயம் பிடித்து

ஓடியே போனுரே உல்லாச ரூபழகன்
நாடியே கண்டு நலமாய் மனதிலெண்ணி

இன்னுமிவர் சேதியை யாமறிய வேண்டுமென்று
பின்னும் மயங்கிப் பலங்குறைந்து தான்கிடக்கும்

அன்னவரைப் போல அவர்கிடந்தார் காத்தவனுர்

இங்கிவனைக் கட்டுதற்கு இன்ன கயிருகாது
சங்கிலிதான் வேண்டுமினு தான்கொண்டு வாருமென்று

மதயானை கட்டுகிற வாகன சங்கிலியால்
இதவாகத் தான்பிடித்து இறுக்கினுர் கையிறுக

சங்கிலியால் கட்டிடவே தேட்டாளன் காத்தவனுர்
அங்கதனைக் கையாலே அறுத்தார் பொடிப் பொடியாய்

பொடிப்பொடியாய் அறுத்தெறிந்து பூவிதனைப்
பார்த்து

கடியமலர்க் குழலீர் கட்டிடநீ பண்ணிவைத்தாய்

என்னைப் பிடிக்கவரும் எதிரில்லா வீரருடன்

வந்தவர்கள் தன்பலத்தை வகையாயிறிந் தேனடிபூவாயி
கந்தமலர்க் குழலீர் கட்டவந்த வீரருடன்

என்னைப் பிடிப்பதுவும் எளிதாய் இருக்குமோதான்
முன்னுல் சிவனுரும் மொழிந்ததொரு சாபமதால்

கர்த்தன் கிருபையினுல் கட்டுப்பட வேணுமினி
கள்ளனுமே யான்தான் கட்டுமென்றுர் காத்தவனுர்

வெள்ளிமலை நாதரருள் காத்தவனுரி
உலகம் விளங்கத் தோன்றி

துள்ளிவிளை யாடிய சங்கப்
பிள்ளையிடம் வந்தருளித் தெளிவனுகி

தெள்ளமுதாய் வளர்ந்தருளும் மாலையரைக்
களவுதனில் திருடிப் போன

கள்ளனுமே யானெனவே காத்தவனைச்
சேப்பிளையான் கட்டினானே.

மைந்தனெனும் காத்தவனை வந்துதான் சேப்பிளையான்
அந்தமுள ஓர்கையிலே அன்புடனே மாலைகொண்டு
மாலையரைத் தொட்டணைந்த வலதுகையில் மாலைகொண்டு
காவலனும் கட்டிக் கடுகி நடந்தானே.

நடந்தனன்காண் காத்தவனும் முன்நடக்க
நாடிவந்த சேவகர்கள் பின்நடக்க

தொடர்ந்தனன்காண் சேப்பிளையான் மாலைகொண்டு
துரந்திரனைக் கைப்பிடித்தே ராசன்முன்னே

அடர்ந்தனன்காண் ஆரியப்பன் கொலுமுன்பாக
அடிபணிந்து அரசனுட சமுகந்தன்னில்

படர்ந்தனன்காண் காத்தவனைச் சபையோர்முன்னே
பாருமையா என்றுமவன் பகருவானே.

வசனம்: ஆகோ கேளும் பிள்ளாய் அரசுகாவல் சேப்பிளை யானே இந்தக் காத்தவராயன் மகாசுத்த வீரனுச்சுதே உன் கையில் எப்படி அகப்பட்டான்.

பதினாறு அடி விருத்தம்

கச்சியுமை பங்காளர் பார்வதியாள் பெற்றிடும்
காத்தவ ராயன் வந்தான்
கலியுகம் விளங்கிட அவதார மதுசெய்த
கலியுக வரதன் வந்தான்

பச்சமலை பதிகொண்ட பார்வதியாள் பெற்றிடும்
    பரிமள ராயன் வந்தான்
பாங்கான வயிரசெட்டி பாளையம் பதிகொண்ட
    பச்சைக் கழுவன் வந்தான்

உச்சித மாகடவ பக்தர்வினை தீர்த்திட
    உவந்து அவனும் வந்தான்
ஓங்காளி கையினில் கின்னரி தமுரும்பெற்ற
    ஓங்கிதிரு லோலன் வந்தான்

அச்ச மில்லாமலே ஆரிய வாலையை
    அணைந்த போசன் வந்தான்
அழகான பெண்கொடி ஓந்தாயி தன்னையும்
    அருஞ்சிறை யெடுத்து வந்தான்

வச்சிரகிரி மேவுவேன் வரைத்தாசியர்கள் மோகிக்க
    வாது கூறிடவே வந்தான்
மகராசனுகவே அரசு காவலுங் கொண்ட
    மாணிக்க ஒளியன் வந்தான்

இச்சையுடன் யானுமே ஆசையாய் தேடிட
    எங்கள்துரை வீரன் வந்தான்
என்னாளும் என்னருகில் எப்போது மிருக்கவே
    ஈசனருள் பெற்று வந்தான்

தட்சருபங் கொண்டு பூவாயி மனைதனில்
    தானுமது உண்டு வந்தான்
சந்தோஷ மாகவே என்கையில் கட்டுண்டு
    சமுகத்தி லெதிரே வந்தான்

நிச்சய மாக என்னாளும் பாச்சூரில்
    நின்று கழுவேற வந்தான்
லீலா விநோதனே நிருபனவன் சமுகம்
    நேரிடக் காத்தான் வந்தான்

தனமுடைய அருமலர்கள் தொழுதேத்தும்
    ஆரியப்பா தனசேகர சிங்காரனே

தினமுடைய மறையோர்கள திருச்சமுகம்
தனிலுரைத்த தீர னவனே

மனமுடைய மாலையரைச் சிறையெடுத்த
மதகரியை யாரும் தேடி
கனமுடனே பிடித்துவந்தேன் பரிமணத்தை
தேவரீர் கைக்கொள்ளு வீரே.

அறஞ்செலுத்தும் வேந்தனே நீ அருள்கொடுக்க
விடைபெற்று அடியேன் சென்று
திறஞ்செலுத்தித் தேசமதில் யான்தேடிப்
பிடித்து வந்தேன் தேவரீரும்

அறஞ்செலுத்தும் காத்தவனே அடக்கம்
செய்திடுவீர் அவனை நீரும்
புறஞ்செலுத்தி விட்டாலும் கழுவேற்றி
வைத்தாலும் உன்பெருமை தானே.

வசனம் : ஆகோ கேளுங்களய்யா சாமி உங்களுடைய ஆக்கினைக்குப் பயந்து என் பிள்ளையை உன் உலகமுழுவதும் அலைந்து தேடிப்பிடித்துக்கொண்டு உம்மிடத்தில் விட்டுவிட்டேன். தயவுசெய்து விட்டபோதிலும் உமமுடைய இஷ்டம் கழுவேற்றி வைத்தாலும் உன்பெருமை தானய்யா சுவாமி.

வெண்பா

ஐங்கரனைப் போற்றிசெய்து அடிதொழுது முக்காலும்
இங்கிதமாய் இயம்பிடவே ஏசல்—பொங்கமுடன்

ஏசல்தனைக் கரிமுகனே யான்படிக்க
ரய் காப்புத் தானே.

புலையது சிங்கம் போல
புஜபலத் தழக னனை
கலியுகம் விளங்க வந்த
காத்தவ ராயன் தானும்
வலியுடன் கட்டிச் செல்ல
மன்னவன் கொலுவின் முன்னே
நலிவுடன் காத்தே நிற்க
ராசனும் கொலுவி ருந்தான்.

ராசனும் கோலுவி ருந்து
நலமுடன் காத்தான் தன்னை
நேசமாய் உனக்கு இப்போ
நீணிலத் தரசு காவல்
வாசமாய் தந்தோம் நீயும்
வகையுடன் நடக்கை தப்பி
பாசமாய் மறையோர் பெண்ணை
பரும்சிறை எடுக்க லாமா?

வசனம்: ஆகோ கேளும் பிள்ளாய் காத்தவராயனே நீர் முன்னாலே செய்த குற்றமெல்லாம் பொறுத்து உன்னை மேலாக வைத்திருக்கும் பிர்ம குலத்திலே பிறந்திருக்கும் ஆரியமாலையை சிறையெடுக்கலாமா சொல்லும் பிள்ளாய் காத்தவராயனே.

மெய்யனே உலகம் தன்னில்
வேந்தர்க்கு வேந்தா கேளாய்
வையகம் தன்னில் பிரமன்
வகுத்திடும் படியாய் தோன்றும்

வெய்யவே வரும் பொருட்டை
ஒருவனால் விலக்கப் போமோ
அய்யனே கேளு மென்று
அடிபணிந் துரைசெய் தாரே.

நடை

நாட்டுப்பாடல்

ஆரியப்பூ ராசாவேஎன் ஆண்டவனே கும்பிடுறேன்
காரியமாய் கேட்டருளும்என் கர்த்தாவே
சொல்லுகிறேன்

தேசம் அறிந்திடவே செய்தகுற்றம் நீர்பொறுத்து
வாசமுடன் எந்தனுக்குப் மனது பிரியதமாய்

பாதிகாவல் எந்தனுக்கு பகுத்திரே ராசாவே
சாதி மறையோர்கள் சரியென்று சொல்லிடவே

பெத்த தகப்பனினும் பிரபலமாய் எந்தனுக்கு
புத்திமது சொன்னீர்காண் புண்ணியரே உம்மாலே

எண்ணி வருங்கருமம் எப்படியோ நீரறிந்து
[illegible] பக்ஷிமது கோபமில்லை என்பேரில்

வாருமையா ராசாவே ஒருவசனம் உரைக்கின்றேன்
பாருலகில் முன்நடந்த பழமை உரைக்கிறேன்

துஷ்டருக்கு எத்தனைதான் சொன்னாலும் சொன்னமொழி
அஷ்ணமே பொறுத்தல் ஆவதுண்டோ மன்னவனே

வஞ்ச அரவினுக்கு வாய்த்தமிர்தம் தானளித்தால்
நஞ்சை உதவுமல்லால் நல்லமிர்தம் தந்திடுமோ

தேள்தனைக் கையால் சேர அணைத்தெடுத்தால்
ஆள்தனைக் கொட்டாமல் அமிர்தம் கொடுத்திடுமோ [18]

நெருப்பைக் கனல்பொறியாய் நேரிட்டு ஒதுங்காமல்
விருப்பமுடன் முடிந்தால் வேகாமல் விட்டிடுமோ

பாட்டைவைத்[19] தானெளிதாய் பார்த்துச் சுழற்றிவிட்டால்
வெட்டாமல் விட்டிடுமோ வேந்தரே கேளுமைய்யா

துஷ்டருக்கு உரைத்தபுத்தி சிறக்குமோ லோகந்தன்னில்
இஷ்டமாய் சிறையெடுத்தேன் இது ஒருபெரிதோ
முன்னால்

திட்டமாய் பெரியோர்பெண்ணைத் தேடியே யெடுத்தபேரை
பொட்டெனச் சொல்லுவேனிப்போ புகழுரை
செய்குவீரே.

வாருமையா ராசாவே ஒருவசனம் உரைக்கின்றேன்
பாருமையா யானடியேன் பணிந்து உரைக்கின்றேன்

பார்வதியாள் தானிருக்க பரம சிவனாரும்
ஓர்சடையில் கன்னிதனை ஒளித்து வாழலையோ

நலமுடைய லஷ்மியாள் நன்றாய் அருகிருக்க
உலக மளந்ததொரு உத்தமனும் மாயவனார்

தேச மதிலாய் சிறக்கவே கொண்டருளி
சத்திய பாமாவைத் தழுவி யணையலையோ

அன்ன மதிலேறும் ஆனதொரு பிர்மாவும்
வர்ணக் கலைமகளை வாக்கிலே வைத்தருளி

தானே படைத்துச் சமைந்ததொரு ஊர்வசியை
மானே யெனத்தொடர்ந்து மருவிப் புணரலையோ

கந்தனுடன் தெய்வானை கலந்து அருகிருக்க
வந்து குறவருட வள்ளிதனைச் சேரலையோ

இந்திரர்க்கு இந்திராணி இசைந்துஅருகிருக்க
வந்து அகலிகையை மருவிப் புணரலையோ[20]

எடச்சிகள் சேலையெலாம் எடுத்து மரமேறி
கடைக்கண்ணுள் பார்த்திருந்தார் கன்னியர்
மேலாசையதால்

வர்ணமுள்ள மாயவனுர் வாழும் இடைச்சியுடன்
வெண்ணெய் திருடியுண்டு மேவிப் புணரலையோ

பார்த்தனும் சுபத்திரையாள் பாங்காய் கலந்திருக்க
வேத்துமையாய் அல்லியரை மேவிப் புணரலையோ

சாதனமாய் கண்ணகியும் தானிருக்கக் கோவலனுர்
மாதவியைக் கூடி மருவிப் புணரலையோ

கானத் தபசிருக்கும் கௌசிகரும் ஆசையதால்
மேனகையைக் கூடி மேவிப் புணரலையோ

வருந்தும் வசிஷ்டரிஷி வையகத்தி லெப்போதும்
அருந்ததிப் பெண்ணுளை அணைந்து கலரலையோ

முன்னும் சிலபெரியோர் மும்மூர்த்தி தான்முதலாய்
வர்ணமுள்ள பெண்களுடன் மருவிப் புணரலை
இன்னமொரு வார்த்தை இசைந்துரைக்க நீர்

பட்சமுடன் போசனத்தை கையாலேர்
பாலமிர்தம் புகட்டினதால் பய

இச்சையுடன் கலிதனக்கு மாலையிட்ட... ...
இதுபெரிதோ அறியாமலெரிந்துபோடும்

உச்சிதமாய் தேள்விஷங்கள் பந்து ருமாந்தர்
உறுதியுடன் துஷ்டருக்குச்-சொன்னபுத்தி

அட்சணமே போய்விடுங்காண் சொன்னேன்
அரசனே என்வசனம் கேட்பீரே

கேட்டிடுவீர் வீரய்யனும் விருப்பமுடன்
கொண்டுமிகப் பெண்ணொளித்தார் கிருட்டிணனும்

நாட்டமுடன் இந்திரரும் அகலிகைக்காய்
நலமுடனே சாபம்பெற்ருன் முனிவரிடத்தில்

தேட்டமுடன் குருதாரம் தன்னைத்தீண்டி
திறமுடைய சந்திரனும் குறைந்துபோனான்

வாட்டமுள்ள ராவணனும் பெண்ணாலேதான்
மாண்டதையும் கேட்டிடுவீர் மன்னவனே

செய்யாதேதும் செய்தேனோ சேரைத் திறந்தேனோ
வையகத்தில் இல்லாத வன்கொடுமை செய்ததுண்டோ

சட்டமுடன் ராசாவே சபைதனிலே இப்போது
கட்டை அவிழ்த்துவிடும் நடந்ததைச் சொல்லு கிறேன்

பூட்டை முறித்தேனோ புதுக்களவு செய்தேனோ
எட்டரைக் குள்ளே எதமாயிருந்த பெண்ணை

பத்தரைக் குள்ளிருந்து பதுசைக் குறைத்தேனோ

தவித்துவரும் மானிடர்க்கு எந்நாளும்
நிதிகொடுத்துத் தயவு வைத்து

விபத்துத்தனை யகற்றி வைக்கும்
வீரமுடி காத்தவனை வியந்துராசன்

அவிழ்த்துவிட உத்தரவு கேட்டு
மிகசேப்பிளையான் அஸ்தம் தொட்டு

கயிற்றினால் கட்டியிருந்த கட்டை
அவிழ்த்துவிட்டான் கனிவுள் ளோனே.

கட்டை அவிழ்த்திடவே காத்த பரிமளமும்
ராசாவைத் தான்பூண்டு கைதொழுது

வாருமையா ராசாவே ஒருவசனம் உரைக்கின்றேன்
காருமென்று காவல்தனை கட்டளையும் இட்டீர்காண்

பார்தனிலே நான்காவல் பார்த்து வருகையிலே
ஊர்தனிலே நான்காவல் உலாவி வருகையிலே

கன்னியர்கள் தன்னை நான் கடைக்கண்ணால்
பார்ப்பதில்லை
பெண்களையும் நான்கண்ணால் பிரியமுடன் பார்ப்பதில்லை

அறந்தழைக்கும் சுக்ரீவன் ஆக்கினைபோல் நடத்தி
கறந்துவைத்த பால்தன்னைக் காகங் குடியாமல்²¹

நாடெல்லாம் சுற்றி நடந்துவந் தெந்தனுட
வீடல்லால் வேற வீட்டில் படுத்தறியேன்

தகப்பன் சேப்பிளையான் தன்னுடைய பஞ்சணையில்
உகந்து படுத்திருப்பேன் உத்தமனே ஆரியப்பா

உந்தனுட ஆக்கினைக்கு உட்பட்டு யானிருக்க
சந்தேகங்கள் சொல்லுகிறேன் சாமியினிக்
கேளுமைய்யா

சோமாசி பெற்ற சுந்தரியாள் மாலையரை
காம ரதியாளைக் களவில் எடுத்தேனே

அய்யமார் பெண்ணை அநியாய மாகவேதான்
மெய்யாக யான்சிறையாய் விரும்பி யெடுத்தேனே

ஆசையது கொண்டு அய்யமார் பெண்ணை
பாசையினால் மந்திரித்துப் படுங்களவு செய்தேனே

மாருக நடத்தைதப்பி மாறுபா டாகவேதான்
சோர மிகச்செய்து சிறையெடுத்துப் போனேனே

சோசியத்தில் நானும் சுந்தரியாள் மாலையரை
ராத்திரி வேளையிலே நற்சிறைகள் எடுத்தேனே

பாரில் சிறையெடுத்துப் பார்ப்பாரப் பெண்ணாலே
ஊரைவிட்டு நானும் ஓடியே போனேனே

அட்டாவ தானியைப்போல் ஆள்குடைய கிண்ணரியும்
பட்டப் பகல்தனிலே பாடிநான் வருகையிலே

ஆத்தங் கரைதனிலே அநேகம்பேர் பார்த்திருக்க
இதமுள்ள நீராட ஏகினேன் நீர்கேளும்

தண்ணீர்த் துறைதனிலே தான்கண்டு மாலை
என்னழகைக் கண்டு இனிதுமையல் தானாகி

என்கிண்ணரச் சத்தம் கேட்டுமிகத் தான்ந
மாலையரே என்பின்னே வாராதே என்றுசொன்னேன்

சோலைக்கிளி மொழியாள் என்சொல்வசனம் கேட்காமல்
வாரதைக் கண்டு மனதில் பயம்பிடித்து

பார்தனிலே நானும் பறையன் பறையனென்றேன்
சீருடனே நில்லாமல் திரும்பிவரக் கண்டருளி

வருசையுடன் கைபிடித்து மாட்டாயக் காரர்தனை
கூட்டி நடந்து கோமுதலைப் பாரில்வைத்து

ஊரிலே யாரேனும் ஓடியே தேடிவந்தால்
நானழைத்துப் போறேனென்று நலமாகச் சொல்லு
மென்று

மங்கையரை யானும் மணமுடித்தேன் கண்டீரே
பட்டமது: கட்டிவைத்து பார்தனிலே நீர்வந்து

திட்டமது செய்தீர்காண் செப்புகிறேன் இப்போது
சருவியே ஒருவர்தனைச் சலுகையால் சொல்ல
வேண்டாம்

அரிவையே என்மேலாசை ஆகவே கொண்டுவந்தால்
மருவவே பயப்படாதே மனமதுப் பொருத்தங்
கண்டாய்

திறமுடன் பாதிகாவல் காத்திடாய் எனப்பகுந்தீர்
ஆசையாய் தொடர்ந்தபெண்ணை அருஞ்சிறை
வைத்தேனல்லால்

நேசமாய் நடக்கைதப்பி நீணிலம் தன்னிலிப்போ
மோசமே செய்துன்றன் முறையது தப்பேனய்யா

தேசமே பாதிகாவல் சேப்பிளையின் மகன்நானே
குற்றங்கள் ஏதுமுண்டோ கொற்றவனே நீர்பாரும்

தேச மறிந்திடவே செய்குற்றம் நீ பொறுத்து
நடந்த வரலாறு நானுரைத்தேன் மன்னவனே

கடந்த மொழியுரைப்பேன் கட்டுரைக்கக் கேட்டருள்வாய்
காத்தவனூர் சொன்னதைக் கண்டுமிக ராசாவும்

பாத்துப் பரிமளத்தை பரிமளத்தின் தன்னழகை
திங்கள் உதித்தாற்போல் சிவன்கலையும் ஏதுனக்கு

பொங்கமுடன் உருத்ராட்சம் பூண்டதொரு வாறேது
அரிவாள் மடக்கை அணிந்ததொருகிண்ணரம்

மருவிலாப் பொன்னுருமாள் மார்நிறைந்த பூணூல்
மகிழம்பூ மாலை வந்த வழிதனையே

புகலவே நீரும் இந்த வகைதனையே
சொந்தமுடன் நீரும் தெரிய உரையுமென்றார்.

மலையதிர்ந்து சாய்ந்தாலும்
மனங்கலங்கா காத்தவனே
மகிழக் கேளும்

சிலையதிர மல்லர்களைச்
சிரம் துணித்த சேவகனே
செப்புவோம் யாம்

நிலைகலங்கி மதிமயங்கி
சேப்பிள்ளையான் பிள்ளையெனச்
சுற்றிறுய் நீ

உலகமதில் உவப்புடனே
நீபிறந்த வரலாறுதனை
உணரச் செய்வாயே

ராசன் உரைத்தருள நல்ல பரிமணமும்
நேசமுடன் தான்பிறந்த நெடியகதை சொல்லுகிறுர்

வெள்ளிமலை வீற்றிருக்கும் விமலன் அருளாலே
புள்ளி மான் வயிற்றில் பிறந்தேனே பூலோகம்

நந்தவம் காக்க நவின்றுரே ஈஸ்வரனுர்
அந்த மொழிதப்பாமல் ஐவனமும் காத்துவந்தேன்

வந்தார்கள் ஏழுகன்னி மலர்கள் பறிப்பதற்கு
அந்தமுடன் கன்னியர்கள் அவர்கள் நீராடையிலே

வந்துஒரு கன்னியுட வர்ணத் துகிலெடுத்தேன்
பந்தமுடன் நேமமதில் பாங்காய் ஒளிந்திருந்தேன்

ஆறுடிக் கன்னியர்கள் அவர்கள் துகிலுடுத்தி
சீரான கன்னியரில் தேவி ஒருத்தியொட

துகில்தனையே காணுமல் தேடியே பார்ப்பளவில்
மயில் போல யானடியேன் மரத்தில் இருந்ததனு

கன்னியர்கள் யாரென்றே கண்டு கேட்பளவில்
ஒண்டொடி மானீன்ற உத்தமன் நானென்றேன்

ஆறுபேர் தானேடி அரனுர்க்கு உரைத்திடவே
பாருலகில் ஈசனுர் பார்ப்பார வம்சத்தில்

அனந்த நாராயணுர் அவர்க்குப் புத்திரனுய்
புனத்திலே தானெறிய புலச்சியெனே யெடுத்து

மூன்று நாள் பறைச்சி முலையுண்டு வீற்றிருப்பாய்
சேப்பிளை மனையாளாம் சங்கப்பிள்ளை வளர்ப்பாளே.

சோமாசி வயிற்றில் சுந்தரமாய் பிறப்பாள்
காமரதி தனையே கண்டு சிறையெடுப்பாய்

ஆறுபேர் கன்னியர்கள் அன்புடைய மங்கையராய்
சீருடனே வாய்த்திடு வார் சிறந்த கழுவேறி

நம்மிடத்தில் வாருமென்று நவின்றுரே அந்நாளில்

அன்றிட்ட சாபமதால் அடியேனும் பூலோகம்
பிறந்தவிபரம் சொன்னேன் புண்ணியரே நீர்கேளும்

பூதலத்தில் காத்தவனே
பிறந்ததொரு வகையினையே
புகன்றாய் நீயும்

தாதுபுனல் மாலைதனை
சிறையெடுத்தாய் ஒருத்தியென
சரிதான் இப்போ

ஆதரவாய் ஆறுகன்னி
பிறந்தவிடம் எந்தனுக்குப்
பொறுமை யாக

நீதயவாய் உரைத்திடுவாய்
நிச்சயத்தை யானறிய
நவிலு வாயே.

வசனம் : ஆகோ கேளும் காத்தவராயனே சிவனுடைய சாபத்தினுல் ஏழு கன்னியர் பிறந்ததும் சொன்னதும் சரி. அவர்களுக்கும் உனக்கும் உறவானதைச் சொல்லுவாய்.

வாருமையா சொல்லுகிறேன் வந்த வகைதனையே
நாறுமலர்க் குழலாள் நலமான மங்கையரும்

ஆரியமாலையும் ஐய்யர் வயிற்றிலே யுதித்தாள்

வயிரசெட்டி பாளையத்தில் வளமான ஒந்தாயி
மயிரழகி ஆகியதோர் மங்கையராய் தான்பிறந்தாள்

களத்தூரில் இருக்கும் கனத்த சலுப்பரிடம்
சலுப்பச்சி என்றுமவள் சவுதாயி தான்பிறந்தாள்

ஆட்பாடி தன்னில் ஆன இடைக்குலத்தில்
வாய்ப்பாகக் கருப்பாயி வந்துமிகத் தான்பிறந்தாள்

காச்சி மதுவெடுக்கும் கனத்ததொரு குலத்தில்
பாச்சூரில் பூவாயி பாங்காய் பிறந்திருந்தாள்

மாவடி மங்கலத்தில் வாழும் இடைக்குலத்தில்
ஞானியவள் நல்லதங்காள் நன்றாய் பிறந்திருந்தாள்

பொன்னான பூவுலகில் புத்தூர் கிராமத்தில்
வண்ணார நல்லிபொன வந்துமிகப் பிறந்தாள்

கனத்த தவமிகுந்த களத்தூர் மாநகரில்
அனந்த நாராயணர் அவர்தனக்கு நான்பிறந்தேன்

துங்க சோமாசிக்கு சிறந்த உடன்பிறப்பு
மங்காயி தன்வயிற்றில் மகிழ்ந்து பிறந்தேனே

ஆறுபேர் பிறந்தவகை சொன்னதனால்
யாம்கேட்டோம் அவர் தனக்கு
சீருடனே உந்தனுட தொடர்பு
நடந்தவகை திறமதாகக்

கூறுமென்று ராசனவர் கேட்டிடவே
காத்தவனார் குணமதாக
பாருமையா கன்னியிடம் யானுறவாய்
நடந்தவகை பகருவேனே.

அரனடி பணிந்தேற்றும் அனந்த நாராயணனார்
அவர் வயற்றிலே பிறந்தேன்
அன்புடைய சோமாசி அய்யர்க்குப் புத்திரியாய்
ஆரிய மாலைவந்தாள்

வரமுடைய ஒந்தாயி செட்டிகுலம் தன்னில்
வயிரசெட்டி பாளையத்தில்
வந்தே பிறந்திட அவளையே சிறைகொண்டு
வைத்தேன் முதலைப்பாரில்

திறமுடைய சலுப்பச்சி யாகவே சவுதாயி
சென்றங்கு பிறந்திட
யானவ்விடம் சென்று திறமுடனே களத்தூரில்
கோழி கொண்றேன்

அறமது விளங்கிடும் ஆட்பாடி தன்னில்
அழகுகருப் பாயியென்று
அவளும் பிறந்திடயான் அவ்விடம் சென்றவள்
தயிர்மோர் குடித்தேன்

நிரையுடன் புத்தூரில் வாழ்கின்ற வண்ணார
நல்லியன்றே பிறந்தாள்
நின்றவள் மனைசென்று பால்வாங்கி மாலைக்கு
நெறியுடன் கொடுத்துவந்தேன்

சிறையுடன் பாவாணர் புகழ்கின்ற பாச்சூரில்
திறமுடைய பூவாயியாய்
சென்றுமவள் பிறந்திட யானவ்விடம் சென்று
திறமுடன் மதுகுடித்தேன்

உரமுடன் சொல்லுகிறேன் உத்தமனே தூண்டியும்
உறுத்தவே வாடிநிற்பேன்
உயிர்க்கழுவில் இருக்குமவ் வேளையில் இடைக்குலம்
உதித்திடும் நல்லதங்காள்

தாகமுடன் மோர்கொண்டு என்தாகமது தணித்திட
தையலொருத்தி யாய்வருவாள்
தானெழுவர் கன்னியுடன் சாபமது பெற்றுயான்
தாரணியில் வந்தவாரே

காத்தவனார் சொன்னதையும் கண்டுமிக ராசாவும
ஏத்தமுள காத்தவனை இன்பமுடன் கொண்டாடி

காரியக் காரர் கனத்தசபை மந்திரிகள்
சீரிய சந்தோஷமுடன் சிறப்பு மிகவருளி

அந்தப் பிழைபொறுத்து ஆள்கடுமை கொண்டது போல்
இந்தப் பிழைதனைநாம் இப்போதுதான் பொறுத்தோம்

பருவமுடன் கூடியதோர் பாவையாள் தன்னுடனே
திருவரங்கம் பேட்டை தலத்தில் எழுந்தருளி

மாலையுடன் நீரும் வையகத்தில் எந்நாளும்
சாலவே வாழ்ந்திருங்காண் தம்பி பரிமணமே.

ஆலமே உண்ட ஈசன்
அரனருள் புத்திரா கேளும்
கோலமாய்க் களவு செய்து

கொண்டுபோய் பாரில் வைத்து
மாலையும் நீருமாக
வையகந் தன்னில் வாழ்வீர்

வசனம் : ஆகோ கேளும் பிள்ளாய் காத்தவராயனே ஆரிய மாலே சேப்பிளையானுடன் திருவரங்கப்பட்டியில் இரும்பிள்ளாய் காத்தவராயனே.

அரசன் உரைத்திடவே அய்யமார் சோமாசி
பிரியமுடன் வேதியர்கள் பிரபலமாய்க் கொண்டாடி

மங்காயி பெற்றெடுத்த மைந்தனென்று சொன்னீரே
அங்கவளும் பெற்றிடுநாள் அப்போது நாங்களெலாம்

வனத்தில் எறிந்ததொரு மன்னவனும் நீர்தானே
புனத்தில் எறிந்ததொரு புண்ணியனும் நீர்தானே

எங்களுட பெண்ணாலே இறந்திட வேண்டாங்காண்
பொங்கமுடன் நாங்களும் பொன்னான மாலையரை

நாங்கள் ஒருமனதாய் நலமான மாலையரை
தாங்கி மணமுடித்துத் தாரோங்காண் காத்தவனே

சத்தமாய் மாலையரை தாரைமிக வார்த்து
புத்தியுட நாங்களெல்லாம் பொருந்தி மணமுடித்து

சித்தமுடன் செய்து தருகிறோம் என்று சொல்லி
புத்தியுள்ள காத்தவனே என்று புகழ்ந்தார்கள்

சிலைமதவேள் குலைய காத்தவனே
உந்தனுக்குச் செப்புவோம் யாம்

அலைபுகழும் களத்தூர் அனந்த
நாராயணர் அவர்தன் தேவி

சிலைபொருது மங்காயி செல்வனென
எங்களுக்குத் தெரிந்த காலே

விலைமதியா மாலையரை உந்தனுக்கே
மணமுடிப்பேன் விரையுள் ளோனே

அய்யமார் சொல்ல அடிபணிந்து காத்தவனுர்
மெய்யான வார்த்தை விளம்புகிறேன் கேட்டருள்வீர்

பெற்ருளே பிராமணத்தி பேருமிட்டான் சேப்பிளையான்
முத்தாலே ஆபரணம் மோதிரங்கள் கையிலிட்டு

வளர்த்தாளே சங்கப்பிள்ளை வந்துதித்த சாபமிது
தழைத்தபுகழ் மன்னவரே சாற்றுகிறேன் கேளுமினி

ஆரிட்ட சாபம் அழிந்தாலும் வையகத்தில்
மாதாயிட்ட சாபம் மறக்கேன் கழுவிலையும்

அரனுர் வயது பதினுறிலே வாருமென்ருர்
திறமானதோர் வயது சென்றதுகாண் இன்றேடே

பங்குனி மாதம் பதினைந்தாம் தேதியிலே
பொங்கும் பௌர்ணமி பூரணச் சந்திரனில்

வெள்ளிக் கிழமை விடியவொரு சாமமதில்
தெள்ளியசொல் மாலையினுல் செட்டிப் பெண் ஓந்தாயியால்

கரிச்சானும் கத்தி கிழக்கே வெளுக்குமுன்னே
தாழ்ச்சியது இல்லாமல் தானே உயிர்த் தூண்டியிலே

இருப்பாய் கழுவிலென்று ஈஸ்பரனுர் சாபமிட்டார்
விருப்பமுடன் கழுவில் வீற்றிருக்க வேணுமினி

நிற்கவென்ருல் எந்தனுக்கு நீதியல்ல ராசாவே
தாமதமும் பண்ணுமல் தானே யனுப்பினியால்

உமக்கும் புகழ்கிடைக்கும் உம்மாலே எந்தனுக்கு
சேமம் பெறலாம் இப்போதே அனுப்புமென்ருர்.

நன்னிய மறையோர்க்கிந்த
நல்லதாம் வார்த்தை சொல்லி

உன்னிய பூரு வத்தை
உரைத்தேன் யான் எல்லோர்க்கும்

மன்னியே சிறை யெடுத்த
மண்ணினில் இருக்கொணுது

கன்னிதன் பொருட்டினுலே
கழுவினில் ஏறு வேனே.

காத்தவனூர் சொல்வதையும் கண்டுமிக ராசாவும்
பார்த்துப் பரிமளத்தை பரிமளத்தின் தன்னழகை

அழகை எழுதினவன் அதிர்ஷ்டம் எழுதாமல்
இளமைப் பிருயத்தில் ஏறிக் கழுவிருக்க

ஆயன் எழுத்தை அறியவே போகாது
மாயன் கபடமதை மறிக்கவே போகாது

வருந்திமிக ராசன் மகராசன் காத்தவர்க்கு
விருந்துமிகச் செய்துவைத்து வீரமுடி மன்னவனூர்

போவென் றனுப்பிடவே பூநூல் மார்பழகன்
அகிலாண்ட வல்லியுமை அடிபணிந்த பின்னருமே

ஆட்சியுடன் அருள்பெற்று ஆசாரி கொல்லருடன்
ஆட்சியுடன் கழுவிருக்க அருளோடு வாராரே

காரியக் காரரெல்லாம் கண்டு மனதுருகி

வேதியர் களெல்லாம் வெந்து மனதுருகி
சோதனையாய் காணுதற்கு சொல்லி மனதுருகி

தன்னை வளர்த்தருளும் தாயாரும் சங்கப்பிள்ளை
அன்னம் போல்வாய்திறந்து அவளும் புலம்பிடவே

பட்டினத் தோரெல்லாம் பார்த்துப் புலம்பிடவே
திட்டினவே காத்தவனூர் திருசிர புரங்கடந்து

காவேரி தான்கடந்து கஸ்தூரி ரங்கரையும்
நாவாலே துதித்து நல்லஜெம்பு நாதரையும்

தாயார் அகிலாண்டவளை தான்பணிந்து காத்தவனூர்
காயாம் பூ வண்ணனை கன்னனே வாருமென்று

கொள்ளடத்தைத் தான்கடந்து கூட்டி வடக்காக
மெள்ளவே பாச்சூர் மேடைவந்து சேர்ந்தார்கள்

பாச்சூர் மேடைதனில் சென்று காத்தான்
பவ்வியமாய் மற்றந்த தளவாய் தன்னை

ஆச்சாவும் தேக்கதுவும் இரண்டும் சேர்த்து
அறுபத்தடி குறையாமல் அளவாய் இங்கே

பாச்சாவின் மாசியுட மலையிற் சென்று
பாங்குடனே கொண்டுவந்து பதிப்பா யாகில்

தாழ்ச்சியது குறைவில்லா சம்பத் தாக
தருகுவேன் என்னுளும் தருகு வேனே

காத்தவனுர் சொல்ல கனத்த தளவாயும்
இதமுடன் காத்தவனை இன்பமாய் கொண்டாடி

கொல்லி மலையேறி கூசாமல் காளிவனம்
நல்ல சதுரகிரி நடுவில்நின்ற தேக்குமரம்

ஆச்சாவும் தேக்கதுவும் அறுபதடி வெட்டிவந்து
வாச்சியால் சீவி வர்ணமது இழைத்து

ஐயர் உரைத்தபடி அச்சுவண்டி மேலேற்றி
கொண்டுவந்து சேர்த்தார்கள் கொடிய கழுமரத்தை

அன்றுதான் காத்தவனுர் அம்மரத்தைக் கண்டருளி
சந்தோஷம் தானுகி தளவாய் தனைப்பார்த்து

தந்தாரே யென்ற சம்பத்து உண்டாக
மாருத செல்வம் வளரவே தந்தருளி

தாராளும் காத்தவனுர் தச்சன் தனையழைத்து
திருவானைக் காவல்வளர் ஜெம்புலிங்க ஆசாரி

மருவிலா சீரங்கம் வாழும்ரெங்கர் ஆசாரி
ஆசாரி யார்களேநீர் அன்பாய்க் கழுமரமும்

தற்சகுனம் செய்துவைத்தால் சம்பத்து உண்டாக
புத்திர செல்வமுடன் பெருஞ்செல்வம் காமாக்ஷி

சித்தமுடன் கொடுப்பாள் செய்யுங்கள் வேலையென
தெண்டனிட்டு ஆசாரி செய்தார் கழுமரமும்

செய்தனன்காண் ஆசாரி சிறந்து தோன்ற
ஜெகத்திலுள்ள சித்திர மெல்லாம்

மெய்தான்காண் காத்தவனும் கழுவி லேற
மேவியதோர் கைப்பல கையுடன்

பேய்தானும் விட்டகல மெய்நிலைக்க இரண்டுபேர்
பூதலத்தில் உள்ளவர்கள் புகழ்ந்திடச்

செய்ததொரு வேலைதனைக் கண்டு காத்தான்
திருவாக நல்வாக்குச் செப்புவானே

தெய்வ மாவதும் உங்களால்
உபதேச மாவதும் உங்களால்

வைய மாவதும் உங்களால்
மன்ன னுவதும் உங்களால்

உய்யநா னொளியாக சாலைக்கு
உயர்ச்சி யானகண் ணளரே
தையல் காமாக்ஷி தானும்
தண்ணருள் செய்கு வாளே

வாழிபெற்றுக் கொல்லர் மறுபடியும் காத்தவர்க்கு
ஆழிதனில் இருக்கும் ஆயனுடை பாம்பணைபோல்

விஸ்தாரம் ஆக விளங்குமுயிர்த் தூண்டிபண்ணி
கஸ்தூரிப் பொட்டணங்கள் கழுதனிலே தானிட்டார்

தூண்டி துடைப்பருமன் தூண்டிமுள் கைப்பருமன்
தாண்டுமுயிர்த் தூண்டியிலே தங்கமுத்துப் போயேறி

வேண்டியதோர் பூவும் விதமான சிங்காரம்
பூண்டிடவே சங்கிலியும் போத சமைந்தருளும்

பாச்சூர் மேடை பதிவாய்க் கழுமரமும்
காசுமதும் இல்லாமல் தானே படைத்தருளி

நட்டு கழுமரமும் நாலுபுறம் பந்தலிட்டு
ஒட்டுப் பலகையுடன் உயிர்த் திருகாணியுடன்

சாற்றியே பக்கமதில் தான்சமைந்தான் ஆசாரி
போற்றியே காத்தவனை புகழ்ந்து தளவாயும்

சமைந்த கழுவதனில் தானேற வாருமென்று
அமைந்த தொரு ஆசிரியம் அன்பாகப் பாடுகிறான்

கந்தமணி திண்புயனே கண்டியுரு மாலையுடன்
கழுவேறி மீள வருவீர்
கஸ்தூரி வாசகா ஆரங் குலுங்கிட
கழுவேறி மீள வருவீர்

சுந்தரா யுதத்தனே காத்தவ ராயனே
சுகந்துகழு ஏற வாரீர்
துய்யனே பூலோகம் வையகம் தழைத்திட
துணிந்துகழு ஏற வாரீர்

பந்தமாய் உனதுதிருப் பாதமது காணவே
படுங்கழுவில் ஏற வாரீர்
பல்லாண்டு கூறினேன் என்மனைகாத்த
தேசிகா
மரக்கழுவில் ஏற வாரீர்

எந்தனுட வினையகல் எந்நாளும் அருகிருந்து
இக்கழுவில் ஏற வாரீர்
எங்கள் காமக்ஷி அருள்பெறவே கழுவிற்கு
இப்போதே வருகு வாயே.

நடை

வருவாயென்று சொல்லி மலரடியைத் தெண்டனிட்டு
பிரியமுடன் தளவாய் பல்லாண்டு கூறிடவே
முன்னே அனுப்பிவிட்டு முத்துமுடி காத்தவனுர்
பின்னுக முதலைப் பாருதனைத் தானேகி
மாலையற்கு சேதிவகை மேலாய் உரைகின்ருர்

அந்தமுடன் கழுவேறத் தளவாய் வந்து
அழைத்திடவே காத்தவனுர் மாலை பக்கம்
பந்தமுடன் நடந்ததெல்லாம் விபர மாக
பைங்கிளிக்குத் தானுரைக்க பாச்சூர் விட்டு
வங்கணமாய் கழுவேறி உன்னை யழைக்க
வருமளவும் இங்கிருமென மகிழ்ந்து கூறி
விந்தையுடன் பாரைவிட்டு பாச்சூர் நாடி
விரைந்தோடி ஐயனவர் வெளியில் வந்தாரே

முதலையாம் பாரை விட்டு
மோகன தேசி யேறி
அதலவிதள சுதள நிதள
'பாதாள லோகமும் நடுங்கியே
கதறிட அரசர் போற்றும்
கதிரொளி வர்ண னேபோல்
மதனவேள் சுந்தரக் காத்தான்
வந்தனன் கழுவ டிக்கே.

நடை

கழுவடியில் வந்துநின்று காத்த பரிமளமும்
தொழுது வணங்கி துய்யோனும் ஏணிவழி

அன்னாள் உரைத்தபடி அபத்தமே வாராமல்
இன்னாளில் எந்தனுக்கு ஈஸ்வரியே மாகாளி

அம்பலம் தன்னிலே நடன மாடிய
அன்னையே பத்திர காளியே

அருள்வனம் தன்னில் பறவை கொன்றிட
அன்புடன் உன்னை தேடியே

கம்பனையும் வென்ற தேவரீர் காளி
காளியே வன சூலியே

கண்டுமே போற்றிட வாளுட கையும்
கையிலேந் திட்ட காளியே

தும்பை சூடிப் பிறையணிந்திடும்
சூலியே மா காளியே

சொல்லுநாள் அடியேனும் மாலையை
சிறையெடுத்து நான் கூட்டியே

வம்பனுய்க் கழுவி லேறும் வேளையில்
வந்துநீ யருள்தந் தருள

மலரடி தொழுத டியேன் உனக்கு
எதிர்வந் திடயிது சமயமே.

நடை

காளி கொடுத்தருளும் கையருவாள் கிண்ணரியும்
நீலியவள் மாலைதனை நேசமுடன் தானழைத்து

வாழி உமையவளை மனதில் நினைத்தருளி
தாயே காமாக்ஷி தானுரைத்த வாக்குப்படி

மகா ஈஸ்பரருடனே வந்தருள வேணுமென்று

கந்தன் கணபதியை கருத்திலே தான்துதித்து
பந்தமுடன் தான்நினைந்து பாடுகிறார் தேவாரம்,

பச்சை மால்தங் கையே
பரமனுர் இடபா கமதில்
இச்சையாய் கூடி வாழும்
ஈஸ்பரி யம்மாள் கேளும்
நிச்சய மாலை தன்ஞல்
நெடுங்கழு வேறச் சொன்ன
கச்சி காமாக்ஷி தேவி
கடுக வந்தருள் செய்வாயே.

உச்சித மாக நீயும்
உகந்து தான்சா பமிட்டாய்
நச்சர வணியே பூண்ட
நாதனுர் பாணியே கேளாய்
அச்சமே ஏது மின்றி
அடியேனும் கழு விலேற
கச்சி காமாக்ஷி தேவி
கடுக வந்தரு ளுவாயே

என்னையே உண்டு பண்ணி
இனிது டன்சா பமிட்டு
பொன்னகர் தன்னி லென்னை
போதவே பிறவு மென்று
அன்னையே கைலை வாழும்
அரனிட பாக மாதே
கன்னிகா மாட்சி தேவி
கடுக வந்தருள் செய்வாயே.

இக்ஷண மாக யானும்
இப்புவி தனிலு தித்து
அச்ச மதேயில் லாமல்
ஆரிய மாலை தன்னை
நற்சிறை எடுத்து என்னை
தூண்டியில் ஏறச் சொன்ன
கட்சி காமாக்ஷி தேவி
கடுக வந்தரு ளுவாயே

வள்ளியென்னு திருகண்டருடன் சார்ந்து கம்பதி
வாழும் தாயே

எண்ணமிலா பச்சமலை வயிறசெட்டி பாளையமும்
இலங்கும் கூத்தூர்

சொர்ணமணி வீரேஸ்புரம் ஓமாந்தூர்
பதிமுழுதாய்
துலங்கி யானும்

எண்ணியான் கழுவேற காமாக்ஷி எந்தனுக்கு
எதிர்நிற்பாளே.

தொழுகுலமும் அரசர்களும்
தேசமதில் வணிகர்களும்
தொழுது வாழ்க

வளர் நலமே கங்கைகுலான்
வளஞ்சார்ந்த இந்திரகுலான்
வண்மை யாக

கெளிர் பூசை தொழுவருளும்
சம்பந்தி காமாக்ஷி
சிறக்க என்றும்

கழுவளரும் பாவனை போல்
குடிவளர்க்கக் காமாக்ஷி
கருது வாயே

முக்கோடி தேவதையும்
யான்தொழுதேன் சத்தியமாய்
முன்னே நின்று

எக்கோடி மனிதருக்கும்
வரமருளும் ஈஸ்வரியே
எந்தன் தாயே

பொற்கொடி நிகராக
யான்நம்பி மாலையரை
சிறையில் வைத்தேன்

தற்காக்க இதுசமயம்
காமாக்ஷி முத்தியருள்
தருகு வாயே

முப்பத்து முக்கோடி தேவர் முதலாக
நாற்பத்து எண்ணுயிரம் முனிவர்கள் தன்னுடனே

அன்ன காமாக்ஷியரை அடிவணங்கித் தெண்டனிட்டு
தென்கைலே வாழும் சிவனுரைத் தெண்டனிட்டு

அம்மான் திருமாலே அடிவணங்கி தெண்டனிட்டு
தாக்கமுள லெஷ்மியை தானே அடிபணிந்து

தொழுது வணங்கியையன் துய்யோனும் ஏணிவழி
பழுதாலே தானேறி பார்க்கக் கழுமுனையில்

அன்றுதான் சேப்பிளேயான் அண்ணுந்து பார்த்துநின்று
கண்டுதான் மைந்தனேயும் கண்ணீர் சொரிந்தருளி

என்றுனேக் காண்பேன் என்கண்மணியே என்றழுதான்

பிள்ளையில்லாப் பாவியு நானுனே யெடுத்துப்
பிரியமாக வளர்த்தே னப்பா

கள்ளவிழி மாலேயி னுல்கழு வேறிப்
பதம்பெறவும் காண்போ ராகி

தெள்ளமிர்தமே கொடுத்தாள் அவளும் நானும்
தெரியநின்று தபங்கு கின்ருேம்

உள்ளதொரு நல்வாக்கு நீயுரைத் திடுவாய்
எந்தனுக்கு உயிருங் கொளவே.

தகப்பன் சேப்பிளேயான் தாயாரும் சங்கப்பிள்ளே
தேசத்துக் கதிபதியாம் தீரனவன் ஆரியப்பன்

இகத்தில் வளர்த்தருளும் என்தகப்பா கேட்டருளாய்
ஈஸ்பரன் கிருபையினுல் எடுத்து வளர்த்தாய்நீ

சால நல்வாக்கு சாற்றுகிறேன் கேளுமினி

நீர்க்குமிழி ஏது நிலேத்த காயமேது
பார்மேல் பிறந்தவர்கள் பரலோகம் சேர்வதல்லால்

என்னுளும் பூலோகம் இருப்பார் ஒருவரில்லே
நன்ருக உந்தனுக்கு நானுமிகச் சொல்லுகிறேன்

காமாக்ஷி வாசலுக்கு காத்தானென்று பேரும்பெற்று
காமாக்ஷி வாசலுக்கு நல்பதியே உண்டுபண்ணி

கலியுக தேசமதில் காத்தவ ராயனென்று
நலியாமலே கழுவில் நானேறும் போதளவும்

உன்கையால் கட்டுண்டு உலகத்தோர் கொண்டாட
உன்கையால் கட்டிடவும் சத்தியமாய் உந்தனுக்கு

ராச வரிசையாய் ராசாக்கள் மெச்சிடவே
ஆசையாய் உந்தனையும் அனைவோரும் சூழ்ந்துவர

மாலை கழுத்திலிட்டு வாண மத்தாப்புடனே
ஆலயங்கள் எல்லாம் ஆனெழகன் சேப்பிளையான்

காருலவும் பெருங்கடல் கடல்சூழ்ந்த வையகமும்
பேருள்ள மட்டும் பெருமைகள் கொண்டாட

இப்பூமி தன்னில் என்பேர் விளங்குமட்டும்
செப்பமுடன் உன்பேரு செலுத்திவைப்பேன்
என்றுரைத்தார்

உலகமதில் காமாக்ஷி சாட்சி யாக
உந்தனுக்குப் பிள்ளையென்று உலகம் சொல்ல

நலம்பெறவே உன்குலத்தை வளர வைத்து
நெறியுடனே மாலையரை சிறையெடுத்து

சிலையழக னுகவுந்தான் உந்தன் கையில்
சிக்கியுமே கட்டுக்குள் அடக்க மாக

தலைவனென்று இச்சமயம் உன்பேர் சொல்லி
சதிர்கட்டிக் கழுவேறித் தழைப்பே னென்ருர்.

வசனம்: ஆகோ கேளும் என்னை வளர்த்த கடமைக்காக நான் சொல்லிய வாக்கின்படியே காமாஷி கிருபையால் நடப்பது நிச்சயம் உம்முடைய வீடுபோய்ச் சேருமென்று என்னவிதமாக வாழ்த்துகிருர் பார்.

அச்சாலே தலைவர் அருள்காளிக் காதேவர்

ஆணைக்கொல்லன் ஆசாரி அடிதொழுது தூண்டிதனை
நாணயமாய் என்கழுத்தில் நலமாகச் சூட்டென்றும்

மானைத் துதித்து மகாதேவர் சொற்படியே
சொன்னவெங்கு சூட்டுமென்று கூப்பிட்டார் காத்தவனுர்

ஆண்டியுட சாபமதால் மாலையரை சிறையெடுக்க
அரனார் சாபம்

வேண்டியுடன் மணமுடித்தேன் வேதியர்கள்சபையில்
விரைந்து சென்று

தாண்டி முறை கேட்டசனம் எந்தனுக்குக் கழுவேற
தயவு செய்தார்

தூண்டிகொண்டு ஆசாரி எந்தனுக்கு பீடமிருக்க
சூட்டு வாயே

சூட்டிடவே வாருமென்று சூரனவர் தானழைக்க
மாட்டிடவே வாருமென்று மகாரசன் தானழைக்க

ஆசாரியான் தொழிலாளர் அனைவோரும் வாழ்கவென்று
ராசனவர் ஆரியப்பன் நாட்டிலுள்ளோர் தான்வாழ்க

எல்லோரும் வாழியென இறையோனருள் பெறவே
நல்லோரும் வாழ்க நாடுதழைக்க வென்று

தொங்குகின்ற தூண்டிதனை தூய்யோனிடத்தில் வைத்து
அங்குமந்தச் செங்கல்தனை அடுக்கி யிருப்பதனை

தம்முடைய காலாலே தள்ளி அப்புறத்தே

அண்ணாந்த பார்வையோ ஆதிசிவன் சொற்படியோ
நின்றாரே காத்தவனார் நேராய்க் கழுமுனையில்

மழுதனை ஏந்துங்கையால் மாதங்கி தவத்தினாலே
பழுதறப் பாரிலேதான் பாங்குடன் மாலைதன்னை

தொழுதிட சிறையெடுத்து துண்டியின் இடத்தில்
வைத்து

கழுதனில் வீற்றிருந்தான் காத்தவ ராயன்தானே

கழுவில் இருப்பதனை கண்டந்த மானிடர்கள்
அழுத கண்ணோடு அவர்கள் புலம்பிடவே

பார்த்த பேரெல்லாம் பாபமி தென்று சொல்லி
ஏத்த பேரெல்லாம் இதுபுதுமை யென்றுசொல்லி

கண்ட பேரெல்லாம் கண்ணீர் சொரிந்திடவே
அண்டையிலே நின்றவர்கள் எல்லோரும் போனார்கள்

இப்படி மூன்று நாளும்
இயல்புடன் இருக்கக் கண்டு
சொற்படி முன்னால் வந்த
தோகையும் நல்ல தங்காள்

நெல்படி தானும் வாங்கி
நேர்மையாய் மோரு கொண்டு
கல்பிழை யாகப் போக
காத்தவ ராயன் கண்டார்.

இடையர் குலந்தனிலே இயல்பான நல்ல தங்காள்
நடையழகி யாகியதோர் நல்லதங்காள் மோரு
கொண்டு

போவதையும் கண்டு புகழ்பெரிய காத்தவனார்
ஏவியே மந்திரத்தை இயல்பான கன்னியிடம்

மந்திரமென்னும் வலையை அவள்மேல் வீசிடவே
அந்தரத்தின் மேலிருந்து அழைத்தாரே கைகாட்டி

கண்டு மதிமயங்கி கன்னியவள் நல்லதங்காள்
அண்டிக் கழுவடியில் அண்ணாவே என்னரசே

இந்தக் கழுமுனையில் இருந்துமிக அண்ணாவே
அந்த முடனென்னை அழைத்த விபரமென்ன

சொல்லுகிறேன் தங்கையரே தோகையரே மேல்பிறப்பே
தெள்ளமையால் மாலையரை சேர்ந்து கழுவிருந்தேன்

இருக்கிறேன் தங்கையரே எந்தனுக்குத் தாகமது
பொறுக்கவில்லை எந்தனுக்கு பெருந்தாக மேதணிய

அடிமேல டியைவைத்து படிமேலே காலைவைத்து
துடியாக மோர்கொடம்மா தோகையரே என்பிறப்பே

காத்தவனார் சொல்ல கன்னியவள் நல்லதங்காள்
ஏத்தமுள்ள அண்ணாவே இந்தாரும் ஏறுகிறேனென்றாள்

பருத்தமுடன் நல்ல தங்காள் பரிவுடனே மோர்கொடுக்க
பரிமண முந்தான்

சித்தமுடன் மோருண்டு களைதீர்ந்து இளைப்பாறி
உயிர்தெளிந்து சொல்வார்

அத்தருடன் இந்நெறியது உரைப்பேன் தோகையரே
அருளக் கேளும்

புத்தியுடன் மனைக்கேகு என்று சொல்ல மங்கையரும்
போயினளே.

பானைநிறைய நெல்லாய் பலநெல்லாய் உண்டுபண்ணி
மாணிளையைப் பார்த்து வாழ்த்துகிறார் காத்தவனார்

மோர்கொடுத்த நல்லதங்காள் முத்தியது பெற்றிருக்க
பால்கொடுத்த நல்லதங்காள் பாக்கியங்கள் பெற்றிருக்க

தாகம் தணித்தவர்கள் சந்நிதியுங் பெற்றிருக்க
தாகம் தணிந்ததுபோல் அவர்கள் மிகவாழ்க

மாடு பெருகிவர மனைவி மக்களுண்டாக
ஆடு பெருகிவர அழிவில்லாச் செல்வமது

பட்டி பெருகிவர பாக்கியங்கள் உண்டாக
கட்டுக் குலையாமல் காலியது பெருகிவர

வாக்குப் பலிக்குமென்று வாழ்த்தினார் காத்தவனார்
பாக்கிய லஷ்மியும் பகுந்து குடியிருக்க

போனாள்காண் நல்லதங்காள் போய்புகுந்தாள் தன்வீடு
மாறனும் போனவுடன் மங்கை அவள்தனக்கு

அங்கமெலாம் நொந்து ஆக மனதெழும்பி
தங்கப் பரிமணமும் தானிருக்கும் வாரதுபோல்

அங்கு கழுப்போல அவளிருந்தாள் அம்மானை

நாடறியக் காத்தவனார்
ஞாலமதில் கழுவிருக்க
நவிலும் சொர்க்கம்

தேடறிய பன்னிருவர்
சித்தர்களும் திரண்டுவந்து
சிறந்து பார்த்து

ஆடறிய பரிமளத்தை
உயிர்பிடித்துப் போவமென்று
அருமை யான

லாடர்களும் கழுவடியில்
சுற்றிவந்து கழுவடியை
நாடினரே.

உயிரைப் பிடிக்கவென்று ஓடிவந்த லாடர்களை
மயிரில் துரட்டிகொண்டு மாட்டி யிழுப்பதேபோல்

தம்முடைய மந்திரத்தால் சகலமுனி லாடர்களை
அவ்விடம் விட்டேகாமல் அமர்த்தினர் காத்தவனர்

செய்து மிருக்கையிலே தேசிமடம் தானேறி
பொன்சட்டை தான்தரித்து பொன்னல் தடியதுவும்

கத்தியும் கட்டாரியும் கனமான ஆயுதமும்
வெற்றியுடன் வெண்புரவி மேலேறி ஆரியனும்

காரியமாய் தானென்று கைகாட்டிக் காத்தவனர்
ஆரியனே வாருமென்று அவனைமிக ஏதுரைப்பார்
பாரில் நல்ல தூண்டியிலே படுந்துயரம் தீர்ந்திருக்க

கத்தியால் தானே கழுத்தறவே வீசுமென்ருர்
மெத்தெனவே கேட்டு வீசினர் ஆரியனும்

கத்தி கழுத்தில்விழ காமாக்ஷி நாயகியும்
அத்தருடனே வந்து அழகான கழுவடியில்

காத்தவனர் கழுவேற ஆரியன்தான்
கழுத்தறவே வீசிடவே மாலையாக
போற்றியே புகன்றிடவும் கண்டுதேவர்
புரந்தரனர் விடையேற்றி பூவையாளும்

தோத்தரித்துக் கழுவிருக்கும் பரிமணத்தை
தூக்கியிரு கரத்தாலே மடிமேல்
வைத்தகற்றி இச்சடலம் விட்டுநீயும்
ஆயிழையா ரெழுவருடன் வருகுவாயே,

கன்னியர்கள் தனைக்கூட்டி வாருமென்று
காமாக்ஷி புகன்றிடவே காத்தான் தானும்
உன்னிதமாய் ஆரியனைக் கழுவிலேற்றி
உந்தனுக்குமுன் ஊட்டிப் புசிப்பே னென்று

மென்னியையே பிடிக்கவந்த லாடர்தன்னை
வாருமென்று சடலத்தை மறித்துப் போட்டு
நன்னியே மோர்கொடுத்த நல்லதங்காள்
தனையழைத்து மாலையிடம் நடந்தாரையன்.

காத்தவனார் மாலைசென்று பாரில் புக்கி
கனிவுடனே நடந்தவகை யெல்லாம் சொல்லி
நேத்தியாய் சடலமதை மறித்துப் போட்டு
நிமிஷம்வர வேணுமென்று ஐயர்கூற

வாழ்த்தியே கூடதனை விட்டு மாலை
வயிரசெட்டி மகளுடனே வந்து சேர
பூத்த பூவாயி சவுதாயி நல்லி
புகழ்கருப்பாயி எழுவருடன் புக்கி னாரே.

அரனார் உமையாளும் அன்பாய் விடைகொடுக்க
திறமான ஆரியனை சிறந்தகழு மேலேற்றி

வரமும் அவர்களுக்கு வாக்கும் கொடுத்தருளி
தரமுடைய லாடர்களை சகலகன்னி மார்களுடன்

இச்சடலம் விட்டு இயல்பான தேவதையை
மெய்ச்சடலம் விட்டு வெளிப்பட்டார் அம்மானை

சட்டை முறித்து வைத்து சர்ப்பம் நடப்பதுபோல்
இட்டமுடன் சிப்பிதனில் இருந்ததொரு முத்துதனை

திட்டமுடன் சங்கதனில் சேர்த்துப் பதிப்பதுபோல்
விதையதனை எடுத்து நடுவது போலாக

ஊத்தைச் சடலமதை ஒளித்துப் புவிதனிலே
காத்தானும் தன்னுடலை கழித்தாரே பாரதனில்

தூலத் தடக்கி சூருமதில் உள்ளடக்கி
காலத்தைப் போக்கி கழித்தார் உடலுமதை

பத்திர காளியுடன் பார முனித்திரளும்
உத்தமனாய் சென்று உகந்திருந்தார் பச்சமலை

அதிசய மாகப் பூமி
அனைவரும் பிழைக்க வேண்டி
விதியுடன் மாலை தன்னை
விரும்பி யேசிறை யெடுத்து

கதிகளும் பெற்றுக் கொண்டு
கழுதனி லேறி மீண்டு
பதிவுமுண் டாக்கி வைத்த
பரிமள ராயா வாழி

---

# குறிப்புகள்

1. சதுர் முகப் பிரம்மா—இவரை கம்மாளர் வழிபடுவர்
பக்கம் 11

2. நாடுகாவல் போன்ற அதிகாரிகளுக்கு அளிக்கப்பட்ட மரியாதைகள், தலைப்பாகை, சால்வை, சரப்பளி, கடுக்கன் வல்லவாட்டு முதலியன.
பக்கம் 11

3. உரையும் பாடலுமாக நடிப்பதற்கேற்றபடி எழுதப் பட்டது. இதனை Folk Play என்று கூறலாம்.
பக்கம் 12

4. கட்டபொம்மன் பாடலில் "காகம் பறவாது" 'சிட்டுப் பறக்காது,' என்று பாஞ்சாலங் குறிச்சியின் சிறப்பைக் கூறும் பகுதி இதனோடு ஒப்பு நோக்கத் தக்கது.
பக்கம் 14

5. காத்தவராயன் என்ற கதாநாயகனது இயற்பெயர்
பக்கம் 17

6. சேப்பிளையான் மனைவி பக்கம் 17

7. பெத்த பிள்ளை—பரிமளம் இவர்களது வளர்ப்புப் அவ்வளவு கீழ் சாதியல்லர். பக்கம் 17

8. சேப்பிள்ளையான் அதிகார எல்லைகள் இங்கு குறிப்பிடப் பட்டுள்ளன. தஞ்சையில் ஒரு பகுதியும் இராமநாதபுரத்தில் ஒரு பகுதியும் இவ்வெல்லையில் உள்ளன. பக்கம் 18

9. ஊர்கள், ஆட்கள், கப்பல்கள், நாடுகள், மாடுகள், விதைகள் முதலியனவற்றை அடுக்கி அழகாகச் சொல்லும் போக்கு காப்பிய மரபு (Epic Tiadition) அதனை நாட்டுக் கதைப் பாடலிலிருந்துதான் கவிஞர்கள் கூறினர்கள் பக்கம் 19

10. ஊர்ப் பெயர்களை அடுக்கிக் கூறுதல் பக்கம் 21

11. தலங்களின் பெயர்களை அடுக்கிச் சொல்லுகிறார்
பக்கம் 22

12. மனு—அவதி வாய்தா பக்கம் 24

13. ஊர்ப் பெயரடுக்கு பக்கம் 25

14. காத்தவராயன் இருப்பிடத்தின் அழகை வருணிக்கிறாள்.
பக்கம் 26

15. பழமொழி பக்கம் 28

16. பரிமளம் தேவலோகத்திலிருந்து வந்தவன் என்று பின்னர் வரும் கதைக்கிணங்க அவன் மாயவேடங் கொண்டதாக இவ்விடத்தில் கூறப்பட்டது. பககம் 30

17. மதுவெடுக்கும் சாதியைச் சார்ந்த பூவாயி வீட்டில் அவனைக் காணலாம் என்று சொன்னான். பக்கம் 30

18. வரிசையாகப் பழமொழிகளில் பேசுகிறாள். பக்கம் 38

19. பட்டாவை—வாள் பக்கம் 38

20. புணரலையோ—புராணக் கதாநாயகர்கள் பல தார மணத்தையும், பலசாதிக் கலப்பு மணத்தையும் தனக்கு முன்னுதாரணமாகக் காட்டுகிறான். பக்கம் 39

21. இதே அடி கட்டபொம்மு பாடலில் வருகிறது. பக்கம் 40

22. இதுபோலவேதான் முத்துப்பட்டன் சக்கிலியப் பெண்கள் பாடலைக் கேட்டு ஆற்றங்கரையருகே அவர்களைப் பார்த்துக் காதல் கொண்டதாக முத்துப்பட்டன் கதை கூறும். பக்கம் 41